[Sri C. Subramaniam] [20th January 1961

Poonamallee High Road, other important roads like Body Guard Road and the road from General Hospital to Parry's Corner as well as certain important bus routes. The improved surfacing of these roads will be done in such a manner that they will last without repairs for the next 10 or 15 years. This assistance has, in a large measure, helped in the immediate difficulties consequent on the recent heavy rains.

7. The most significant item of capital expenditure for which an increased appropriation is asked for is the Parambikulam-Aliyar Project. The demand for further expenditure on this Project in the current year is Rs. 1·37 crores over and above the budget provision of rupees one crore. Out of the seven major dams covered by the project, work has been started on five major dams and appreciable progress has already been made on the Aliyar Dam. Work on excavating foundations for Sholiar, Tirumurthi and Parambikulam Dams has been taken up and is in good progress. Construction of camps and buildings at Parambikulam, Tunocadavu, Topsip, Vettaikaranpudur, Pollachi and Thirumurthinagar have been all completed and occupied. Building camps at Sholiar and Valparai is in progress.

8. The Reserve Bank of India has recently sanctioned a sum of Rs. 65 lakhs for participation in the share capital of Madras State Co-operative Bank, District Co-operative Central Banks and Co-operative Agricultural Banks. A demand has been made for the consequent expenditure in share capital participation though it does not involve any net outgo from the State's funds. Under Road Transport, an additional amount of Rs. 30 lakhs has been asked for to put through the current year's programme of 123 vehicles for the Madras Branch and 34 vehicles for the Kanyakumari Branch. One other significant item is an additional appropriation of Rs. 35 lakhs towards compensation to zamindars. This reflects the satisfactory progress in settlement operations which are expected to come to an end in 1962–63.

9. Under "Loans and Advances", apart from the loan of Rs. 15 lakhs to the Corporation of Madras for the improved surfacing of main roads, we have asked for an additional appropriation of Rs. 5 lakhs for the Subsidized Industrial Housing Scheme.

10. Sir, with these few words, I now commend the second supplementary estimates to the House with the confidence that the House will welcome and accept these items of expenditure.

### VI.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. SPEAKER : We will now proceed with the discussion on the Governor's Address.

Now, the hon. Member, Sri M. S. Selvarajan will move the Motion of Thanks to the Governor's Address. I propose to allot 20 minutes to the mover of the Motion, 25 minutes to hon. Member Sri P. S. Chinnadurai as leader of a party and 15 minutes each for the rest of the hon. Members participating in the debate to-day.

20th January 1961]

SRI M. S. SELVARAJAN : Sir, I beg to move—

"That an humble address be presented to the Governor as follows :

'The Members of the Madras Legislative Assembly thank the Governor for the address[a] delivered to the Members of the Legislature on the 19th January 1961.'"

The motion was duly seconded.

MR. SPEAKER : The hon. Member, Sri M.S. Selvarajan, may now speak on his motion.

* SRI M. S. SELVARAJAN: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டு கவர்னர் அவர்களுடைய உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை பிரேரேபணை பண்ணக்கூடிய பாக்கியம் எனக்கு கிடைத்ததுபற்றி சந்தோஷப்படுகிறேன். கவர்னர் அவர்கள் சாதாரணமாக ராஜ்யத்தின் பொதுவான நிலைகளையும், நடந்தது, நடக்க இருப்பதையும்பற்றி சூசகமாக சில வார்த்தைகள் அடங்கிய ஒரு அறிக்கையை சமர்ப்பிப்பது வழக்கம். இந்த ஆண்டு ஒரு விசேஷமான காலத்தில் கவர்னர் அவர்கள் உரை வழங்கப்பட்டிருக்கிறது. கடந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலம் பூர்த்தி அடையக்கூடிய சந்தர்ப்பத்திலும், அடுத்த திட்டத்திற்கு கால்வைக்கக்கூடிய பூர்வாங்கமாக இருக்கக்கூடிய நிலையிலும் இந்த ஆண்டு கவர்னர் அவர்களுடைய உரைக்கு முக்கியத்துவம் உண்டு.

கவர்னர் அவர்கள் முதலில் எடுத்த எடுப்பிலே நம்மை நோக்கி வரக்கூடிய எலிஸபெத் மகாராணியாருக்கு வரவேற்பு கூறியிருக்கிறார். அது நம்முடைய இயல்பான பண்பு. அதுமாத்திரமல்லாமல், இந்திய தேசம் ஆளப்பட்டு வந்த தேசம். இந்திய தேசத்தை ஆண்டவர்களே அந்த தேசத்திற்கு நண்பர்களாக மாறியிருக்கக்கூடியது தேச சரித்திரத்தில் ஒரு புதுமை. அது உலகிற்கு ஒரு எடுத்துக்காட்டு. நட்பு முறையிலே பழகியிருக்கிறோம் என்பதை வெளிப்படையாக காட்டுகிற தோரணையில், தோழியராக நட்பு முறையில் இந்த நாட்டில் ராணியார் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யப்போகிறார்கள். அதுமாத்திரமல்ல. இங்கிலாந்து தேசத்திய ராணியார் உலகம் முழுமைக்கும் ஒரு பெரிய எடுத்துக்காட்டாக இருக்கிறார்கள். அவருடைய கணவர் முற்றிலும் ராஜபரம்பரையைச் சேர்ந்தவரல்ல. அவர் 'பார்ஷியலி காமனர்'. அவர் ராஜபரம்பரையை சேர்ந்தவராக இருந்தாலும், ஓரளவுக்கு சாதாரண பரம்பரையை சேர்ந்தவர் என்று கருதக் கூடும். அந்த நிலையில் ராணியார் காட்டிய வழி உலகம் முழுமைக்கும் பல்வேறு தேசங்களுக்கும் ஒரு எடுத்துக்காட்டு. அரசனும் ஆண்டியும் ஒன்று என்ற பண்பு உலகம் முழுவதும் பரவி வருவதற்கு எடுத்துக்காட்டாக இருக்கக்கூடிய முறையில் நடந்துகொண்ட பெருமை ராணி அவர்களுக்கு உண்டு என்று

---

[a] Printed as Appendix III on pages 132–135 infra.

கருதுகிறேன். ராணி அவர்களை வரவேற்கக்கூடிய விஷயத்தை தம்முடைய உரையில் முதலாவதாக கவர்னர் அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அடுத்தபடியாக, அழிவின் மத்தியிலே செழுமை என்று சொல்லக்கூடிய வகையில் இந்த ராஜ்யத்தில் கடந்த சில மாதங்களுக்கு முன்பு பெய்த அதிக மழை, புயல் காரணமாக சேதங்கள், அழிவுகள் ஏற்பட்டிருந்தும், அதே சமயத்தில் அதன் காரணமாக அதிகமாக விளைச்சல் ஏற்படுவது நிச்சயம் என்ற நல்ல செய்தியையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். சமீபத்தில் திருநெல்வேலி ஜில்லாவில் பெய்த பெருமழை, புயலைப்பற்றிய செய்தி இந்த அறிக்கையில் விடுபட்டிருந்தாலும்கூட, அரசாங்கம் இதுவரையில் இம்மாதிரி அழிவு, சேதம் ஏற்பட்ட காலங்களில் எடுத்துக் கொண்டிருக்கக்கூடிய சிறந்த பெரிய முயற்சிகளையெல்லாம் இந்தப் பிரதேசத்திலும் தொடர்ந்து எடுத்துக்கொண்டு நடத்துவார்கள் என்ற நம்பிக்கையோடுதான் இந்த உரையை சமர்ப்பித்திருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். சமீபத்தில் தூத்துக்குடியில், குறிப்பாக தென் பிராந்தியத்தில் இருக்கக்கூடிய கடலோரப் பகுதிகளில் எல்லையற்ற சிரமங்களுக்கும் அழிவுகளுக்கும் மக்கள் ஆளாகியிருக்கிறார்கள். ஏறத்தாழ 10 தோணிகள், பல லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள தோணிகள் அழிந்து போகக்கூடிய நிலைமை ஏற்பட்டு, அதுமட்டுமல்லாமல் அந்த இடத்தில் போக்குவரத்தே ஸ்தம்பித்து போகக்கூடிய சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய அரசாங்கம் அது விஷயமாக ராஜ்யத்தில் இருக்கக்கூடிய அவற்றையெல்லாம் தேடி எடுக்கக்கூடிய கருவிகாரணங்களையெல்லாம் அங்கு கொண்டு வருவதற்கு எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொண்டிருந்தாலும் கூட, முற்றிலும் சிறந்த முயற்சிகளை அவசரமாக எடுத்துக்கொண்டு போக்குவரத்தை செம்மையாக்குவதற்கு, அவசியமானால் கடற்படை உதவியைக் கொண்டும் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்து அதை சீக்கிரமே செய்து முடிப்பார்கள் என்று நினைக்கிறேன்.

நம்முடைய கவர்னர் அவர்கள் ராஜ்யத்திலுள்ள விளைவு நிச்சயமாக நல்ல விதமாக இருக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நாம் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஏறத்தாழ 12¾ லட்சம் டன் கூடுதல் விளைவு உண்டு பண்ண முடியும் என்று எதிர்பார்த்திருந்தாலும், அதன் பிரகாரம் அந்தத் துறையிலே நாம் வெற்றிபெற முடியாமல் போனதற்கு பல்வேறு காரணங்கள் உண்டு. முக்கியமாக நல்ல விதமான தேவையான உர விநியோகம் செய்வதற்கான நிலையை நம் ராஜ்யத்திலும், மொத்தத்தில் தேசத்திலும் நாம் அடையவில்லை. அந்தப் பாதையை நோக்கி வேகமாக நடந்துகொண்டிருக்கிறோம். அந்த இலக்கை பிடிப்பதற்கு இன்று இயலாவிட்டாலும்கூட, எதிர் காலத்தில் இன்னும் பல லட்சக்கணக்கான டன், ஏறக்குறைய 33 சதவிகிதம் உயர்வு பெற்றுவிடுவோம் என்ற நம்பிக்கையோடு மூன்றாவது திட்டம் அமைக்கப்பட்டு வருகிறது. எல்லாவிதமான திட்டங்களையும் தேசம் முழுவதிலும் வெற்றி பெறச்செய்வதற்கு

20th January 1961] [Sri M. S. Selvarajan]

அதுதான் அடிப்படையாக அமைந்திருக்கிறது என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். அதை கவர்னர் அவர்கள் தன்னுடைய குறிப்பில் காட்டியிருக்கிறார்கள்.

அது தவிர, இந்தத் திட்டத்தின் இலக்கைப் பொறுத்தமட்டில் நாம் விரும்பியது பல்வேறாக இருக்கலாம். இரண்டாவது திட்டத்தில் நாம் பல கோடி ரூபாய் பெறுமான திட்டங்களை விரும்பிக் கேட்டிருந்தாலும் ரூ. 152 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால் ரூ. 181 கோடி நாம் செலவு செய்யக்கூடிய அளவிற்கு நமமுடைய திட்டங்களை வேகமாக நம்முடைய முயற்சியை தளர விடாமல் நடத்திக்கொண்டே இருந்தோம். மத்திய அரசாங்கமும் நமக்கு உதவியாக இருந்தது. அந்த அளவுக்கு நாம் முயற்சி செய்தால், அந்த அளவுக்கு நமக்கு நிச்சயம் உதவி கிடைக்கும் என்பதைத்தான் அது எடுத்துக்காட்டுகிறது. அந்த நிலையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்ட முதலீடு சுமார் ரூ. 291 கோடி என்று தற்போதைக்கு வரையறுக்கப்பட்டுள்ளது. தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி, நெய்வேலி போன்ற பெரிய திட்டங்களை மத்திய அரசாங்கமே நிறைவேற்றுவதற்கு முன்வந்திருக்கிறார்கள். ஆகவே, நாம் எதிர்பார்த்த அளவிற்கு நாம் நிச்சயமாக வெற்றி பெற்றிருக்கிறோம் என்ற பூரண திருப்தி இந்த ராஜ்ய மக்களுக்கு ஏற்படலாம் என்பதைத்தான் கவர்னர் அவர்கள் தன்னுடைய குறிப்பிலே எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். கடந்த இரண்டு வருஷ காலமாக இந்த சபைக்கு அரசாங்கத்தின் சார்பாக கொடுக்கப்பட்ட அறிக்கையில் மூன்றாவது திட்ட காலத்தில் கிட்டத்தட்ட ரூ. 275, 280 கோடி வரையிலும் நாம் பெற முடியும் என்ற நம்பிக்கை தெரிவிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது ரூ. 291 கோடி என்று திட்ட முதலீடு வரையறுக்கப்பட்டிருக்கிறது. அது சிறிய விஷயமல்ல என்பதை நாம் புரிந்துகொள்ளுவதற்கு முடியும். எதிர்பார்த்தபடி நாம் பெற்றிருக்கக்கூடிய தொகையை முற்றிலும் சிறந்த முறையில் நாம் செலவழிப்பதோடு கூட, நம்முடைய ராஜ்யத்தின் பொறுப்பு ரூ. 100 கோடி இருக்கிறது என்பதை நாம் உணரவேண்டியவர்களாக இருக்கிறோம். எல்லாத் துறைகளிலும் அதற்குத் தேவையான ஒத்துழைப்பைப் பெறுவதன் மூலமாகத்தான் திட்டத்தின் இலக்கை சித்திபெறச் செய்வதற்கு முடியும்.

இன்றைய தினம் நாம் திட்டத்தின் இலக்கைப் பெறுவதற்கு ஏதேனும் தடை இருக்குமானால், அது விலைவாசிகளின் உயர்வு தான். இந்த விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதற்கு முழு முயற்சியும் இன்று அரசாங்கத்தின் தரப்பில் மாத்திரம் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறதே தவிர, எந்த எதிர்க் கட்சியினரை எடுத்துக்கொண்டாலும், நியாயமான அளவுக்கு விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு உருப்படியான ஆலோசனையைச் சொல்லுவதற்கு யாரும் முன்வந்ததாகத் தெரியவில்லை. இத்தகைய பெரிய காரியத்தை செயலாற்றும் பணியில், அரசாங்கம் மட்டுமே தனித் தரப்பில் முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டிய நிலையில் இருக்

[Sri M. S. Selvarajan] [20th January 1961

இறது. உணவுப் பொருள்களின் விலைகளை அனுசரித்து, மற்றும் பல்வேறு பொருள்களின் விலைகளும் உயர்ந்து கொண்டே போகின்றன. இந்த நாட்டினுடைய பொருளாதார வளர்ச்சியின் காரணமாக மட்டும் இந்த நிலைமை ஏற்பட்டதாக நான் கருத வில்லை. உலகம் முழுவதிலும் ஏற்பட்டு இருக்கக்கூடிய பதட்ட நிலைமையும் இதற்குக் காரணம் என்று நான் கருதுகிறேன். உலகத்திலுள்ள எல்லா நாடுகளுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள நம் நாடு மட்டும் தனித்து நிற்க முடியாது. ஆகவே தேசம் முழுவதிலும் வளர்ந்து வரும் பொருளாதார நிலைமை இதற்கு ஒரு காரணம். அதோடு உலகம் முழுவதிலும் ஏற்பட்டுள்ள பதட்ட நிலைமையும் மற்றொரு காரணம். திட்டத்தின் முழு வெற்றியைப் பெறவேண்டுமானால், அதாவது செயல்படும் திட்டங்களின் முழுப்பலனையும் நாம் அடையவேண்டுமானால், விலைவாசிகளின் உயர்வை ஒரு நியாயமான வரம்பிற்கு நாம் கட்டுப்படுத்த வேண்டும். இதை அரசாங்கம் உணர்ந்துகொண்டுதான் வருகிறது.

பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக இரண்டாவது திட்டத்தில் 14 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருந்தது. மூன்றாவது திட்டத்தில் நமது அரசாங்கம் 27 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது. என்றாலும் இன்னும் நிறைவேற்றுவதற்குத் திட்டங்களே இல்லை என்று அரசாங்கம் இருந்துவிடக்கூடாது. மேல் திசையில் இருக்கக்கூடிய நதிகளில் வீணாகப் போகும் தண்ணீரைப் பயன்படுத்த முயற்சிகள் எடுக்க வேண்டும். புனலாறு, பம்பையாறு, மேல் பெரியார் திட்டங்கள் எல்லாம் நம்முடைய பரிசீலனையில் இருந்துதான் வரவேண்டும். ஒருகால் மூன்றாவது திட்டத்தில் இவைகள் எல்லாவற்றையும் நிறைவேற்றும் வாய்ப்பு இல்லாமல் போனாலும் கூட, மத்திய அரசாங்கத்தின் உதவி பெற்று இவைகளை நிறைவேற்றிக் கொள்ளலாமாகையால், எல்லாத் திட்டங்களையும் பரிசீலனை செய்தாகவேண்டும் என்பதை நான் வற்புறுத்துகிறேன். குறிப்பாக, திருநெல்வேலி ஜில்லாவை எடுத்துக்கொண்டால், ராம நதி, சேர்வலார், கடனா நதி போன்ற திட்டங்கள், முன்பாத்தியதை கொடுத்து, கூடிய சீக்கிரம் நிறைவேற்றக்கூடிய திட்டங்கள்.

நம்முடைய ராஜ்யத்தில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கக்கூடிய 100-க்கு 70 பேர், 50 பேர்களாக ஆகும்பொழுது, நிச்சயமாக எல்லா மக்களுடைய வாங்கும் சக்தி பெருகும். இத்தகைய இலக்கைப் பெறுவோமா என்பதை சிந்தித்துப் பார்க்கும்பொழுது, அதற்கு நம்பிக்கை அளிப்பதாக இருக்கும் அம்சம் நமது ராஜ்யத்திலே வளர்ந்து வரும் தொழில் பெருக்கம்தான். வெளி தேசங்களிலேயிருந்து வருகிற தொழில் நிபுணர்கள், வர்த்தகர்கள், ஆராய்ச்சியாளர்கள் எல்லோரும்கூட நமது ராஜ்யத்தில் ஏற்பட்டு வரும் தொழில் வளத்தையும், பெருக்கத்தையும் கண்டு நம்மையும், நம் தேசத்தையும் பாராட்டும் வகையில் பேசியிருப்பது நம் கவனத்திற்குரியது. தொழில் துறை, வர்த்தகத் துறை தலைவர்கள்

20th January 1961] [Sri M. S. Selvarajan]

எல்லோரும், தொழில் வளர்ச்சிக்கு நமது ராஜ்யத்தில் கிடைக்கும் ஊக்கமும், ஆக்கமும் வேறு எந்த ராஜ்யத்திலும் கிடைப்பதில்லை என்று பாராட்டியிருக்கிறார்கள்.

வருகிற காலத்தில் நமது ராஜ்யத்தில் உள்ள மாவட்டங்களில் 26 தொழில் பேட்டைகளும், 100 தொழில் பட்டறைகளும் நிறுவ வழிவகை செய்யப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இதனால் பல சிறு ரகத் தொழில்களும் முன்னேற்றமடையும்.

தூத்துக்குடி துறைமுகம் சம்பந்தப்பட்ட வரையில், அதை ஒரு சூதாட்டப் பணயமாக தேர்தல் சமயத்தில் வைத்துக்கொள்ளலாம் என்று யார் யாரோ நினைத்தார்கள். தூத்துக்குடியை ஒரு ஆழ்கடல் துறைமுகமாக ஆக்க உறுதியான முடிவு எடுக்கப்பட்டு அதற்காக மூன்றாவது திட்டத்தில் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது என்ற சந்தோஷகரமான செய்தியை கவர்னர் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள். நம்முடைய ராஜ்ய அரசாங்கத்தின் முயற்சி பாராட்டுதலுக்குரியது. நமது பாரதப் பிரதமரின் கண்ணியமான பக்கத் துணையும் இதற்கு உதவி செய்திருக்கிறது. இந்தத் துறைமுகத் திட்டம் மேன்மேலும் பல தொழில்கள் வளருவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்குமென்று நான் நம்புகிறேன்.

(Sri V. Subbiah in the Chair.)

இந்த ராஜ்யத்தில் விடுபட்டு இருக்கக்கூடிய ரெயில்வே இணைப்பு சம்பந்தமான திட்டங்களும் சித்தி பெறும் என்ற நம்பிக்கையை ஊட்டும் வகையில் அறிக்கைகள் வெளியிடப்பட்டு வருகின்றன. சேலம்—பெங்களூர் ரெயில்வே இணைப்பு ஏற்கெனவே இருந்ததுதான். புதிது புதிதாக ரெயில்வே இணைப்புகள் கொடுத்து வருகின்ற நிலையில், ஏற்கெனவே இருந்த அந்த ரெயில்வே லையினை மத்திய சர்க்கார் போட்டுத்தான் ஆக வேண்டும். "That goes without saying". நாம் புதிதாகப் போடும்படி வற்புறுத்த வேண்டிய திட்டங்களில், திருநெல்வேலி—கன்னியாகுமரி இணைப்புத் திட்டம் முதலிடம் பெறும்படியாக இருக்கவேண்டும். கீழ் திசையில் தூத்துக்குடி—மானாமதுரை, விருதுநகர் — அருப்புக்கோட்டை — மானாமதுரை ரெயில்வே இணைப்புத் திட்டங்கள் நாம் கோரிப் பெறவேண்டிய திட்டங்கள். இவற்றை எல்லாம் பெறமுடியுமென்ற நம்பிக்கை நமக்கு ஏற்படுகிறது. சாவித்திரிக்கு கொடுக்கப்பட்ட குழந்தை வரத்தின் காரணமாக சத்தியவான் உயிர் பெற்றதுபோல், இத்திட்டங்கள் எல்லாம் விரைவில் நிறைவேற்றப்படும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இதுபோன்று, இன்னும் தூத்துக்குடி—மானாமதுரை, மேலும் கடலோர மார்க்கமாக திருச்செந்தூர்—கன்னியாகுமரி இணைப்புப் பாதையும் செயலில் வரக்கூடியதுதான். இதை எல்லாம் அடுத்து, சேது சமுத்திரம் திட்டத்தைப் பெறுவதற்கு நமது ராஜ்ய சர்க்கார் எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். தூத்துக்குடி துறைமுகத்திட்டம் வந்து விட்டதே என்ற திருப்தியுடன் மட்டும் நின்றுவிடக் கூடாது. இந்தத் திட்டங்களை அடுத்து சேது சமுத்திரம் திட்டம் தானாகவே வரும். இத்திட்டங்களினால் மேலும் தொழில் பெருக்கம் ஏற்படும்.

[Sri M. S. Selvarajan] [20th January 1961

தூத்துக்குடி துறைமுகத் திட்டம் வந்துவிட்டது என்ற பெருமையோடு கவர்னர் அவர்கள் உரை ஆற்றியிருக்கிறார்கள். இது சம்பந்தமாக, நமது அரசாங்கத்துக்கு எல்லோருடைய பாராட்டுதலும் உரியது.

மின்சார இணைப்பு சம்பந்தப்பட்ட வரையில் சுமார் பத்தாயிரம் கிராமங்களுக்கு மின்சார இணைப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் பாக்கியுள்ள 8,000 கிராமங்களுக்கு மூன்றாவது திட்டத்தில் மின்சார சக்தி கொடுத்துவிட முடியும். ஆகவே, இரண்டு திட்ட காலத்திற்குள் 150 ஆண்டு காலம் அந்நிய ஆட்சியில் புறக்கணிக்கப்பட்டு வந்த ஒரு அடிப்படையான கிராம தேவை பூர்த்தியாகிறது என்று நான் கருதுகிறேன். சாதாரணமாக, ஒரு கிராமத்தில் ஒரு கோவில்போல ஒரு பள்ளிக்கூடம் இருக்கின்றது. இப்பொழுது ஊர்தோறும் குடி தண்ணீர் கிணறும் வெட்டப்பட்டு வருகிறது. கிராமங்களெல்லாம் ரோடு இணைப்பு பெறுகின்றன. மேலும் ஒவ்வொரு கிராமத்தையும் கூட்டுறவு இணைப்பின்கீழ் கொண்டுவந்துவிடுகிறார்கள். மின்சார இணைப்பும் கொடுத்துவிட்டால், ஒரு கிராமத்தின் ஐந்து அடிப்படைத் தேவைகள் பூர்த்தியாகிவிடுகின்றன. இதற்கு நமது ராஜ்ய அரசாங்கமும், மத்திய அரசாங்கமும் எடுத்துக் கொண்ட முயற்சிகளே காரணம்.

முன்பு கவர்னர் அவர்கள் உரை நிகழ்த்திய காலத்தில், மின்சார இணைப்புக்கு விவசாயிகள் சம்பந்தப்பட்ட வரையில், குறைந்த பட்ச கட்டணத் தொகையைக் குறைப்பதற்கு வழிவகை செய்யப்படும் என்று உறுதிமொழி கொடுக்கப்பட்டது. மினிமம் காரன்டி ரத்து செய்வதின் மூலம் வாக்குறுதி செய்யப்பட்டிருக்கிறது. பிற்
10·00 a.m. போக்கான இடங்களில் ஒரு குதிரை ஓட்ட வேகத்திற்கு 35 ரூபாயும், மற்ற இடங்களில் 45 ரூபாயுமாக கணக்கிடப்படுமென்று பத்திரிகையில் ஒரு செய்தியைப் பார்த்தேன். அதற்கான உத்தரவுகளைப் பிறப்பிக்க சீக்கிரம் வழிவகை செய்ய வேண்டும். கிட்டத்தட்ட 18,000 கிராமங்களுக்கு மின்சார இணைப்புக் கொடுத்துவிட்டதினால், நம்முடைய கடமை பூர்த்தியாகிவிட்டது என்று கருதக் கூடாது. பல ஆயிரக்கணக்கான குக்கிராமங்கள் விடப்பட்டிருக்கின்றன. வழக்கமாக, புதுப் புது திட்டம் போடும்போதெல்லாம், தனித் தனியாக ரெம்யூனரேடிவ் ஆக 10 சத விகிதம் கட்டுப்படியாக வேண்டும் என்று பார்ப்பதனால், பல்வேறு பஞ்சாயத்துக்களில் உள்ள குக்கிராமங்கள், ஹரிஜனப் பகுதிகள், கடலோரப் பகுதிகள், விடுபட்டுப் போகின்றன. போதிய மட்டில், பஞ்சாயத்துக்களில், குக்கிராமங்களில் இவற்றிற்கு மின்சார இணைப்புக் கொடுக்க வேண்டும் என்று முயற்சி செய்து அவைகளுக்கு விசேஷச் சலுகைகள் கொடுத்து, பஞ்சாயத்துக்களில் விட்டுப்போகும் குக்கிராமங்களுக்கு நிச்சயமாக மின்சார இணைப்புக் கொடுக்க வேண்டும், ரெம்யூனரேடிவ் ஆஸ்பெக்டைப் பார்க்காமல் ரிஜிட்டாக இல்லாமல்—கடினமாக இல்லாமல்—அப்பகுதிகள்கூட வசதி பெறும் அளவுக்கு வாய்ப்பு அளிக்க வேண்டும் என்பதை மின்சார இலாகா கவனத்தில் கொள்ளும் என்று நினைக்கிறேன்.

20th January 1961] [Sri M. S. Selvarajan]

சென்ற தடவை கவர்னர் உரைக்கு பிறகு, பட்ஜெட் உரைமீது விவாதம் நடைபெற்றபோது, நெய்வேலியில், 35 லட்சம் டன் வருஷத்திற்கு உற்பத்தி செய்யலாம் என்று சொல்லி, 40 லட்சம் டன் வரை உற்பத்தி செய்ய மத்திய சர்க்கார் முன் வரலாம் என்று சொன்னார்கள். பின்னால், அந்த வாக்குறுதிக்கும் அதிகமான அளவில், 45 லட்சம் டன் உற்பத்தி செய்ய வாய்ப்புக்கு மத்திய சர்க்கார் வழிவகை செய்திருக்கிறது என்பதைக் கேட்க மிக்க மகிழ்ச்சியடைகிறோம். அறுபது லட்சம் டன் வரை உற்பத்தி செய்யக்கூடும் என்றிருப்பது பாராட்டுதலுக்கு உரியது. இம் மாதிரியான பெரிய திட்டங்கள் ஒருபுறம் இருக்க, ஊட்டியில் பிலிம் இண்டஸ்ட்ரியும் சரி, மேட்டூரில் காகிதத் தொழிற்சாலையும் சரி, இன்னும் ஜில்லாக்கள் தோறும், சர்க்கரை ஆலைகளும் சரி ஏற்படுத்துவது, இந்த இராஜ்யத்திற்கு பெருமை தரக்கூடிய அளவுக்கு இருக்கிறது. அதே சமயத்தில், குறைந்த பட்சம், ஒவ்வொரு ஜில்லாவிலும் இரண்டொரு சர்க்கரை ஆலைகளையாவது நிறுவ சர்க்கார் திட்டமிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

போக்குவரத்துத் துறையில், சிறுசிறு துறைமுகங்களை விருத்தி செய்ய வழிவகை செய்ய வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு, ஜில்லாவுக்கு ஓரிரு சிறு துறைமுகங்களாவது அபிவிருத்தி வசதிகள் செய்து தர வேண்டும். கன்யாகுமாரி முதல் சென்னை வரையில் உள்ள 550 மைல் கடலோரப் பாதையை, நாஷனல் ஹைவேயாக எடுத்துக்கொள்ள வழிவகை செய்தாலும் அது சம்பந்தமான பணச் செலவுப் பொறுப்பு நமக்கு நீங்கும். அது தேசீயப் பெருஞ்சாலையாக மாறினால், பல்வேறு இராஜ்யங்களுக்கும், தேசங்களுக்கும் அது தேசப் பாதுகாப்பு ரஸ்தாவாக உபயோகப்படுவதை உன்னிப் பார்த்தால், கீழ்த்திசை கடலோரப் பகுதி சாலையை, நாஷனல் ஹைவேஸாக மாற்றியே ஆகவேண்டும் என்பதை நாம் நன்கு உணரமுடியும். ஆகவே, அதை தேசீயப் பெருஞ்சாலையாக மாற்ற ராஜ்ய சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த ராஜ்ய சர்க்காருக்குத் தலைமை தாங்கும் கவர்னர் அவர்கள் தன் உரையில் இந்த சட்ட சபையில் அங்கத்தினர்கள் கண்யமான முறையில் நடந்துக்கொள்வார்கள் என்ற கருத்தைச் சொல்லியிருப்பது, இந்த சட்ட சபையில் நாம் கடைபிடிக்கும் முறை வெளியிலும் பிரதிபலிக்க வேண்டும் என்றுதான் சுட்டிக் காட்டியிருக்கிறார் என்று கருதுகிறேன். எப்படியாயினும், நான் இந்தியன், நாம் இந்த தேசத்தின் பகுதி பங்காளியென்ற உணர்ச்சியை வளர்க்க வேண்டும் என்பதையே கவர்னர் அவர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். ஆகவே இந்த உரையை ஆற்றிய கவர்னர் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை பிரேரேபித்து, அதை இந்தச் சட்ட சபை ஏகமனதாக ஏற்றுக்கொள்ளும் என்று கருதுகிறேன்.

[20th January 1961

* SRIMATHI HEMALATHA DEVI : தாற்காலிகச் சபைத் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையின் பேரில், கனம் செல்வராஜன் அவர்கள் பிரேரேபித்துள்ள தீர்மானத்தை வழி மொழிந்து, ஒரு சில விஷயங்களை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

நமது பண்டைக்கால பழக்கம் விருந்தோம்பல். அதற்கு உதாரணமாக, கவர்னர் அவர்கள் உரையில், முதன் முதலாக, பிரிட்டீஷ் பெண்ணரசி எலிஸபெத் ராணி அவர்களுக்கு வரவேற்பு அளிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம் என்பதை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அதைப் பார்க்கும்போது, எலிஸபெத் ராணி அவர்களுக்கு வரவேற்பு அளிக்கும் அளவில் அதிகப்படியாகச் செலவு ஆகும் என்று எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களில் ஒரு சிலர் சொல்கிறார்கள். வெளி நாடுகளிலிருந்து இதுவரை வந்த தலைவர்களுக்காக ஆன செலவைக் கணக்கிடாதவர்கள் தற்போது செலவுத் தொகை அதிகமாகிறது என்று சொன்னார்கள் என்றால், உண்மையிலேயே நேர்தல் நெருங்குகிறது, ஆகையினால் அரசாங்கத்தை குறை கூறவேண்டும், இது பிரசாரத்திற்கு ஏதுவாக இருக்கும் என்று கருதுகிறார்களோ என்றுதான் தோன்றுகிறது. வெள்ளையன் நம் நாட்டிலிருந்து வெளியேறவேண்டும், சுயராஜ்யம் வேண்டும் என்ற காலத்தில் பிரிட்டீஷ் ஆதிக்கத்தை வெறுத்தோமே தவிர, அந்நாட்டு அரசியையோ, வெள்ளையர் இனத்தையோ நாம் வெறுக்கவில்லை என்பதை அவர்கள் உணரவேண்டும். நம்மை அடக்கி ஆண்ட அந்த அன்னிய நாட்டினருடன், நட்பு உறவு கொண்டு இருக்கும் தேசம் உலகத்திலேயே நம் இந்தியா ஒன்றுதான் என்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும்.

மழையினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உரிய, சிறந்த முறையில் பரிகாரம், உதவியளித்திருப்பதை. முக்கியமாக விவசாயத் துறையில் விதைகள் உர வகைகள் வாங்குவதற்கு கடன் தொகைகளைக் கொடுத்து தக்க சமயத்தில். உதவியிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இது மிகவும் பாராட்டத் தக்க விஷயமாகும். பிறகு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பொறுத்த மட்டில், இந்த சட்ட மன்றம் கேட்டதற்கு மாறாக, திட்ட முதலீடு 291 கோடியே என்று குறைந்து விட்டிருந்த போதிலும், முக்கிய அபிவிருத்தித் திட்டங்கள் நாம் போட்டவை பெரும்பாலாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பதை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அது நமக்கு மன நிம்மதியை அளிக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். மேலும் விவசாயத்தில் உணவு உற்பத்தியை 52 லட்சம் டன் என்ற குறிக்கோளை ஏற்று இருக்கிறார்கள். மேலும், நெய்வேலியில், ரசாயன உரத்திற்கான உற்பத்திக் தொழிற்சாலை, முதலியவற்றை ஏற்படுத்துவதுபற்றிச் சொல்லியிருக்கிறார்கள். அதன் மூலமாக உர உற்பத்தி பெருக விவசாயம் முன்னேற்றத்தில் விளங்க முடியும் என்பது நிச்சயம்.

20th January 1961] [Srimathi Hemalatha Devi]

விவசாயத்தைப் பொறுத்த வரை, உற்பத்தி பெருகவேண்டும் என்று சொல்லும்போது, நம் நாட்டில் மக்கள் தொகையில் வளர்ச்சியும் அதிகரித்துக்கொண்டே போகிறது. ஆனால், நில விஸ்தீரணமோ, அன்று போலவே இன்றும் இருக்கிறது. அதில் வளர்ச்சி கிடையாது. மக்கள் உற்பத்தி அதிகம் ஆக, ஆக, அதிகப் படியாக சாதாரண நிலங்களிலும் விளைச்சல் நிலங்களிலும் வீடுகள் கட்டிக்கொண்டே போகிறார்கள். ஆகவே, ஏற்கெனவே இருந்ததைவிட நிலப் பரப்பு குறைந்துகொண்டே போகிறது. ஆகவே, நல்ல முறையில் உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்று சொல்லும்போது, அதிகரித்துக்கொண்டே போகும் மக்களுக்கு குறைவாக உள்ள நிலங்களில் அதிகப்படியான உணவு தானியங்களை உற்பத்திச் செய்யத்தக்க திட்டங்களை மேற்கொண்டிருப்பதைப் பாராட்ட வேண்டும்.

பெரிய பாசன திட்டங்களுக்கு 14·5 கோடியிலிருந்து, 27 கோடி என்று அதிகரித்திருக்கிறார்கள். சிறிய பாசனத்திட்டங்களுக்கும் நான்கு கோடி என்பதை இரு மடங்காக்கியிருக்கிறார்கள், ரூபாய் எட்டு கோடி என்று உயர்த்தியிருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்திலே சேலம் ஜில்லாவில், தர்மபுரி தாலூக்கா ஒரு வரண்ட பிரதேசம். அது நீர் வளம், நில வளம் குறைந்த பிரதேசம். ஆகவே, அங்கு இருக்கும் சின்னாறுக்கு பெரிய பாசன வசதித் திட்ட அடிப்படையிலே, அந்த தாலூக்கா பூராவுக்கும் நீர் வள நில வள அத்தியாவசியமாக இருப்பதால், வெள்ளைக் கோயில் மலைச் சாரம் குன்றுக்கும், மல்லேச்சுவரம் கோயில் குன்றுக்கும் இடையிலே ஒரு அணையைக் கட்டினால், தர்மபுரி பூராவும் நல்ல பயன் அடையும். அந்த திட்டத்தை நல்ல முறையிலே நடத்திக் கொடுக்க ஆவன செய்ய வேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்திலே, காலம் கிடைத்தபோது, சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதோடுகூட விதைப் பண்ணைகளுக்கு ஒரு கோடி ரூபாய் செலவு செய்து இதை நல்ல முறையில் கண்காணிக்கவேண்டும் என்றும் மண்வளப் பாதுகாப்புக்காக 2½ கோடியும் ஒதுக்கியிருக்கிறார்கள். இது உண்மையில் நம் நாடு நல்ல முறையில் வளம் பெறவேண்டுமென்ற கருத்துடன் போடப்பட்டிருக்கிற திட்டங்களாதலால் நிச்சயமாக நாட்டில் நல்ல வளம் ஏற்படும் என்று கூற விரும்புகிறேன்.

அதோடு கூட மின்சாரத்தைப் பொறுத்த மட்டில் சமீபத்தில் சில மாதங்களுக்கு முன்புதான் மேட்டூர் மலைக்குடைவுத் திட்ட வேலையைத் துவக்கி இருக்கிறார்கள். இப்போது குந்தா திட்டத்தின் மூன்றாவது பகுதி வேலையும் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு கனடாவில் இருந்து நமது அரசாங்கத்திற்கு உதவி செய்ய முன்வந்திருக்கிறார்கள் என்று சொன்னால் தனி நாடாக வேண்டுமென்று சொல்கிறார்களே அதுபோன்று, தனி நாடாக ஆனால் இப்படி வெளிநாட்டாரின் உதவி எல்லாம் கிடைக்குமா? தனி நாடானால் அவர்கள் உதவி அளிக்க முன்வருவார்களா? ஏகோபித்த இந்தியா என்று இருப்பதினால்

தான் நம் தேசத்தையும், நம் தேசத் தலைவரையும் மதித்து இந்த மாதிரியாக நல்ல முறையில் உதவி அளிக்க முன்வருகிறார்கள் என்பதை உணரவேண்டும்.

அதோடு கூட நெய்வேலியில் 35 லட்சம் டன்னிலிருந்து 45 லட்சம் டன்னாக நிலக்கரியின் அளவை அதிகரிக்க வேண்டுமென்ற நிலைமையில் நம் அரசாங்கம் சொல்லியிருக்கிறார்கள். மத்திய அரசாங்கம் யந்திர சாலை ஒன்று அமைத்து 60 லட்சம் டன் அதிகப்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். அது மிகவும் வரவேற்கத் தக்கது. இப்படி நிலக்கரி உற்பத்தி அதிகப்படுமானால் சேலம் ஜில்லாவில புது உருக்கு ஆலையை ஏற்படுத்துவதற்கு இது மிகவும் உதவியாகவும் உறுதுணையாகவும் இருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். நமது அரசாங்கமும் சேலத்தில் இரும்பு உருக்கு ஆலையை ஏற்படுத்துவதற்கு ஆவன செய்ய ஆர்வம் கொண்டு எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டுள்ளார்கள். ஆகையால் நான் நம்முடைய அரசாங்கத்தை சேலம் மக்களின் சார்பாகப் பாராட்டி நன்றி யறிதலையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதோடுகூட பெரிய தொழில்கள் மட்டும் அல்ல. சிறிய தொழில்களுக்கும் நம் அரசாங்கம் அக்கறை காட்டுவார்கள் என்கிற உறுதியை கவர்னர் பெருமான் உரையிலே கேட்டோம். குறிப்பாக தென் பிராந்தியத்திலே எல்லாம் புதிய இருப்புப் பாதை போடும் திட்டம் இருக்கிறது. நம்முடைய அமைச்சர் அவர்களின் வலிவான வற்புறுத்தலின்பேரில் தக்க பலன் கிடைக்கலாம் என்று எதிர்பார்க்கிறார்கள். முன்பு இருந்த பாதைகளைத்தான் பழைய படி போடவேண்டும். புதிதாக ஒன்றும் போடப்போவதில்லை. சேலம், பங்களூர் ரயில் பாதையும், அதே போன்று திருநெல்வேலி கன்னியாகுமரி பாதையும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலேயே போடுவதற்கு உடனடியாக ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக சில மசோதாக்கள் எல்லாம் இந்த அவையிலே வரப்போவதாகத் தெரிவித்திருக்கிறார்கள். அதில் குறிப்பாக சீட்டு நடத்துவதைக் குறித்த மசோதா வரப்போவதாக இருக்கிறது. மாதா மாதம் சீட்டு நடத்துகிறவர்கள் கணக்குக் கொடுக்கவேண்டும் என்பதற்குப் பதிலாக மூன்று மாதத்திற்கு ஒரு முறை கணக்குக் கொடுக்க வேண்டும் என்று திருத்தம் செய்தால் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

கடைசியாக சுதந்திரம் அடைந்த நாடு சுபிட்சமாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் நம்முடைய அரசாங்கம் முக்கியமாக பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் எல்லாம், சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் எல்லாம், கூட்டுறவு அபிவிருத்தித் திட்டங்களை எல்லாம் போட்டு ஏராளம் செலவு செய்கிறார்கள். இதைப் பார்க்கும்போது உண்மையிலேயே இந்த நாட்டில் பிறந்தவர்கள் எல்லோரும் சுபிட்சப்படவேண்டும் என்பதுதான். குறிப்பாக கல்வியிலும், விவசாயத்திலும், தொழிலிலும், பொருளா

20th January 1961] [Srimathi Hemalatha Devi]

தாரத்திலும், கல்வித் துறையிலும், மருத்துவத் துறையிலும் பிற்போக்கான நிலையிலுள்ள நம் தேசத்தை சுதந்திரமடைந்த பிறகு ஐந்து ஆண்டு திட்டங்களின் மூலம் தொழில் வளம், கல்வி வளம், நீர் வளம் மிகுந்த விவசாயம் வளம் பெற, பொருளாதாரம் வளம் பெற திட்டங்களை எல்லாம் ஏற்படுத்தியிருக்கிறோம். உண்மையில் ஜனநாயக அடிப்படையில் நாடு எல்லா வகையிலும் வளம் பெறுவதற்கு நாம் போட்டிருக்கிற மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் மிகவும் உதவியாக இருக்கும் என்று தெரிவித்துக்கொண்டு, கவர்னர் உரைக்கு நன்றி தெரிவித்து நன்றி கூறி பிரேரேபித்ததை ஆமோதிக்கும் வகையில் பேசுவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்ததற்காகவும் நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டு, என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரை அவருடைய சர்க்காரின் எதிர்கால வேலைத் திட்டங்களைக் குறித்த சுருக்கமான அறிக்கை என்றுதான் சாதாரணமாக மக்களால் கருதப்பட்டு வந்திருக்கிறது. அப்படிப் பார்க்குமிடத்தே உண்மையிலே கவர்னர் உரையைக் கேட்டவர்களும், கவர்னர் உரையைப் பத்திரிகையில் படித்தவர்களும் வருத்தமும், திகைப்பும் அடைவார்கள் என்று நான் உறுதியாகச் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சுமார் 398 கோடி ரூபாய் இந்த மாநிலத்தில் பல்வேறு வகையிலும் செலவிடப்படுவதற்கான ஒரு ஏற்பாட்டை இந்த சபையானது அங்கீகாரம் செய்தது. 398 கோடி ரூபாய் மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் செலவிடுவதற்குப் போதாது. அதுவும் அபிவிருத்தித் திட்டங்கள் பலவற்றுக்கும், வெவ்வேறு இனங்களுக்கும் செலவிடுவதற்கு மற்ற மாநிலங்களுக்கு ஒப்ப நம் மாநிலத்திற்கும் சரி சமத்துவமான முறையில் ஒதுக்குவது என்றால் இன்னும் அதிகமாகவேண்டும் என்றும் அந்தச் சமயம் இங்கே வற்புறுத்தப்பட்டது. ஆயிரம் கோடி ஒதுக்கவேண்டுமென்று சொல்வாரும், இரண்டாயிரம் கோடி பெறுவதற்கு முயற்சி செய்யவேண்டும் என்று வற்புறுத்துவாரும் அன்றைக்கு இங்கே பேசிய நிலைமையைக் கண்டோம். பொதுவாக பல்வேறு அபிவிருத்தித் திட்டங்களைப் பார்க்குமிடத்து இந்த 398 கோடி ரூபாய் போதாது என்று எல்லோரும் வற்புறுத்தினார்கள். ஆனாலும் அரசாங்கத்தின் கோரிக்கையின் பேரில் 398 கோடி ரூபாய் போதாது என்று வற்புறுத்தி அதற்கு ஏகமனதாக அங்கீகாரம் அளித்தது சபை. ஆனால் அந்த 398 கோடி ரூபாயை கூட வற்புறுத்தி மத்திய அரசாங்கத்திடம் இருந்து பெறுவதற்குத் தவறிவிட்டது இந்த அரசாங்கம். அதோடு அந்த உண்மையை ஒப்புக்கொள்ளாமல் அதைப் பூசி மெழுகி பேசியிருக்கின்ற வார்த்தைகளைத் தான் நான் கவர்னர் பெருமான் உரையில் காண்கின்றேன் என்று சொல்ல விரும்புகிறேன். சுமார் 107 கோடி ரூபாய் வெட்டு ஏற்பட்டிருக்கிறது. கனம் முதல் அமைச்சர் அவர்கள் இன்றைக்கு இங்கே இருப்பது உண்மையில் நல்ல

[Sri P. S. Chinnadurai] [20th January 1961

அதிருஷ்டம் என்று நினைக்கிறேன். இந்த 107 கோடி ரூபாயை யாவது எந்த வகையிலாவது பெற்றே ஆகவேண்டுமென்ற எண்ண மும் உறுதிப்பாடும் அவருக்கு வரவேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். இந்த 107 கோடி ரூபாய் வெட்டை நாம் எந்த வகையில் சரிக்கட்டப் போகிறோம்? அல்லது எவ்வகையில் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தி அந்தத் தொகைக்கும் மேலாகவே நம் திட்டங்களுக்குப் பெறப்போகிறோம் என்பது பற்றி கவர்னர் பெருமான் உரையில் ஏதாவது இருக்கும் என்று எதிர்பார்த்தேன். என்னைப்போல பல மக்களும் எதிர்பார்த்திருப்பார்கள் என்பது இயல்பேயாகும். ஆனால் 107 கோடி ரூபாயைச் சரி செய்வதற் கான ஏற்பாடு எதையும் கவர்னர் பெருமான் உரையில் செப்ப வில்லை. எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர்கள் இதனைக் குறித்து சற்றேனும் கவலை தெரிவிப்பார்கள் என்றும் எதிர் பார்த்தேன். மாறாக அவர்கள் மகிழ்ச்சி வெளியிட்டிருக் கிறார்கள். இந்த மகிழ்ச்சி ஏன் என்று என்னாலே புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் உள்ளத்தில் இருந்து உண்மை யில் இந்த மகிழ்ச்சி வெளிப்பட்டிருக்குமானால் நான் வருந்துவேன். அவர்களைத் தேர்ந்தெடுத்த தொகுதிகளும், இந்த மாநிலமும் வருந்தும் என்றும் முதற்கண் நான் உறுதியாகக் கூற விரும்பு கிறேன்.

இன்று 107 கோடி ரூபாய் வெட்டு ஏற்பட்டது என்றால் எதிலே ஏற்பட்டது என்பதைச் சற்றுக் கவனிக்கவேண்டும். மின்சாரத் திட்டத்திற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 118 கோடி ரூபாய் நாம் ஒதுக்கி இருந்தோம். அந்த 118 கோடி ரூபாய் முழுவதையும் பெற்றாலும் கூட மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியிலே மின்சாரம் போதுமான அளவில் தொழில்களுக்குக் கொடுப்பது பற்றாக்குறையாக இருக்கும் என்று அன்றைக்கே இங்கு சொல்லப்பட்டது. இன்று அந்த 118 கோடி ரூபாய் கூட ஒதுக்கப்படவில்லை. ஆனால் 101 கோடி தான் ஒதுக்கப்பட்டிருக் கிறது. பதினேழு கோடி ரூபாய் மின்சார அபிவிருத்தித் துறை யில் மாத்திரம் வெட்டு. அதுவுமின்றி விவசாயத்துறையிலே 28 கோடி ரூபாயானால் நீர்பாசன வசதியின் விகிதம் 48 கோடி. ஆக மொத்தம் 118 கோடி ரூபாய் இன்றைக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு 80 கோடி ரூபாய்தான் பாசன வசதிக்கு ஒதுக்கப் பட்டிருக்கிறது. இதன்மூலம் 38 கோடி ரூபாய் வெட்டு ஏற்பட் டிருக்கிறது. வேளாண்மைக்கு 138 கோடி ரூபாயும் மின்சார வசதிக்கு 17 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால் இப்போது 107 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப் பொழுது 55 கோடி ரூபாய் வெட்டு ஏற்பட்டிருக்கிறது. வேளாண்மைத் துறையிலேயும் மின்சாரத் துறையிலேயும் வெட்டு ஏற்பட்டிருக்கிறது. இந்த இரண்டு பெரிய துறையிலேயும் வெட்டு ஏற்படுமானால் உண்மையிலே விவசாயத்தையே நம்பி வாழும் மக்கள் எப்படி முன்னேற முடியும் என்று நான் கேட்கிறேன். மின்சாரம் இல்லையென்றால் தொழில்கள் முன்னேற வகை கிடை யாது இந்த வேளாண்மைத் துறையில் நாம் இரண்டாவது

20th January 1961] [Sri P. S. Chinnadurai]

ஐந்தாண்டு திட்டத்தில் எவ்வளவு அடைந்திருக்கிறோமோ, அதே இடத்தில்தான் நம்மை வைத்திருக்கிறோம். அதுவும் இந்தப் பெரிய துறையிலே வெட்டு ஏற்பட்டிருப்பது எப்படி நமக்கு மகிழ்ச்சியை அளிக்கும் என்பது கவர்னர்பெருமான் உரையிலிருந்து தெரிந்துக்கொள்ள முடியவில்லை.

நம் நாட்டிற்கு பிரிட்டிஷ் அரசியார் வருவது வரவேற்கத் தக்கதுதான், மகிழ்ச்சிக்குரிய விஷயம்தான். ஆனால் இது ஒரு சாதாரண விஷயம். இதை ஒரு பெரிய விஷயமாக கருத மாட்டேன். மகிழ்ச்சிக்குரிய விஷயங்கள் எவ்வளவோ இருக்கும் போது அதை எல்லாம் விட்டுவிட்டு இதை மட்டும் கவர்னர் உரையில் குறிப்பிட்டிருப்பது எனக்கு மிகவும் வியப்பை அளிக்கிறது. உதாரணமாக வேளாண்மைத் துறையை எடுத்துக் கொண்டால், இதைக் கடுமையாக பாதிக்கும் பிரச்னை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் இன்று குறிப்பிட விரும்புகிறேன்.

சென்ற திட்டத்திலே இருப்பதைப் பார்க்கிலும் புதிய பாசன திட்டங்களுக்கு அதிகமான தொகை ஒதுக்கியிருக்கிறோம் என்று சொன்னார்கள். இது கவர்னர் பெருமான் உரையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இது போதாது என்பதற்கு ஆதாரங்கள் கொடுக்கிறேன். இதற்கு 12 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதனால், இப்பொழுது 33 ஆயிரம் பாசன ஆதாரங்கள் இருக்கின்றன. இந்த 33 ஆயிரம் பாசன ஆதாரங்களில் 4 ஆயிரம் கிணறுகள்தான் தூர் எடுக்கமுடியும். பன்னிரெண்டு கோடி ரூபாய்க்குப் பதில் 8 கோடி ரூபாய் ஆக குறைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பணம் 4 ஆயிரம் பாசன ஆதாரங்களுக்கு தூர் எடுக்கப் போதாது இருக்கும்போது இந்த 8 கோடி ரூபாயினால் எப்படி பயன் பெற முடியும் என்று சிந்தித்துப்பார்த்தால், இதில் மூன்றில் இரண்டு பங்கு வேலைதான் செய்யமுடியும். ஆனால் 3 ஆயிரம் சொச்சம் பாசன ஆதாரங்களுக்குத்தான் தூர் எடுக்க முடியும், பழுது பார்க்கமுடியும். அப்படியிருக்கும்போது 33 ஆயிரம் பாசன ஆதாரங்களுக்கு பழுது பார்க்க வேண்டுமென்றால் எத்தனை ஐந்தாண்டு திட்டங்கள் வேண்டும். குறைந்தது 10 ஐந்தாண்டு திட்டங்கள் நிறைவேற்றினால்தான் எல்லா பாசன ஆதாரங்களையும் பழுது பார்க்கமுடியும். இப்பொழுது உள்ள ஏரிகள் எல்லாம் நம் மூதாதையினரினால் ஏற்படுத்தப்பட்டது. நமது சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டது அல்ல. இவைகள் பல தலைமுறையாக இருந்து வருகின்றன. இப்பொழுது ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையைப்பார்த்தால் குறைந்தது 50 ஆண்டுகள் ஆகும். இதை கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்துக் கொள்ளாததைப்பற்றி நினைத்தால் மிகவும் வேதனை அளிக்கும். இது ஒரு கட்சிப் பிரச்னையல்ல, மக்களுடைய பிரச்னை என்று மனதில் கொண்டு, கட்சிக்கு அப்பாற்பட்ட பிரச்னையல்லவா என்பதை சற்று யோசித்துப்பார்க்கவேண்டும். இப்பொழுது இவ்வளவு பெரிய வெட்டு ஏற்படுவதற்கு காரணம்

[Sri P. S. Chinnadurai] [20th January 1961

என்ன? நம்முடைய ராஜ்ய மந்திரிகளின் செல்வாக்கு டெல்லியில் இல்லையா? நம்முடைய ராஜ்யத்தை சேர்ந்த ஒருவர் அங்கு மந்திரியாக இருக்கிறார் என்று சொல்லலாம். ஆனால் அவர்கள் என்ன செய்ய முடியும். அவர்கள் திருவள்ளுவர் படத்தையும், மகாகவி பாரதியார் படத்தையும், தியாகராஜர் படத்தையும் ஸ்டாம்புகளில் இடம் பெறச்செய்ய முடிந்ததே தவிர வேறு எதுவும் செய்ய முடியவில்லை. (குறுக்கீடு) அப்படியிருந்தும் நம்முடைய செல்வாக்கு அங்கு பயன்பெற முடியவில்லை. அதற்குக் காரணம் என்ன? இதைக் கண்டுபிடித்து நம்முடைய செல்வாக்கு பயன்பெற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தூத்துக்குடி ஆழ் கடல் துறைமுகத்தைப்பற்றி கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஒரு மகிழ்ச்சிக்குரிய அம்சம். இதை நாங்கள் வரவேற்கிறோம். முதலில் மத்திய சர்க்காருக்குக் கூட இந்த வேலையை எடுத்துக்கொள்ளும்படி சொல்வதற்கு நமது சர்க்காருக்கு துணிவு இல்லாமல் இருந்தது. மத்திய சர்க்கார் கூட ஒரு காலத்தில் எடுத்துக்கொள்ள முடியாது என்று சொன்னார்கள். ஆனால் இந்த சட்ட சபையில் ஒரு விவாதம் நடந்து இந்தச் சர்க்காரும் இதைப்பற்றி மத்திய சர்க்காருக்குச் சொல்லித் துணிவு ஏற்பட்டு இந்த சர்க்கார் மத்திய சர்க்காரை அணுக நேர்ந்தது, மத்திய சர்க்காருக்கும் ஏற்படுத்தவேண்டிய நிலையும் ஏற்பட்டது. இதுபோலவே பல விஷயங்களிலும் நாம் துணிவுடன் நடந்து கொண்டால் நம் மக்களுக்கு நன்மை செய்ய முடியும். இப்பொழுது மத்திய சர்க்காரில் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்த ஒரு அமைச்சர் இருக்கிறார், வேண்டுமென்றால் இன்னொரு அமைச்சரையும் அங்கு நியமிப்பதற்கு கனம் முதல் அமைச்சர் அவர்கள் முயற்சி செய்யலாம். இது எனது வேண்டுகோள் என்றுகூட சொல்ல விரும்புகிறேன்.

மின்சார உற்பத்தியை எடுத்துக்கொண்டால் மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலேயே கிராமங்களிலெல்லாம் மின்சார வசதி பெற முடியும் என்று கவர்னர் பெருமான் உரையிலே குறிப்பிட்டிருக்கிறது. எப்படி இதை நிறைவேற்றப் போகிறார்கள் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பார்த்தால் கிராமங்களிலே பொதுவாக மின்சார இணைப்பு மிகக் குறைவாக இருக்கிறது. பெரிய அளவிலே இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே மோட்டார் என்ஜின்களை வாங்கியும்கூட இன்னும் மின்சார இணைப்பு கொடுக்கவில்லை. இதனால் விவசாயிகள் மிகவும் மனம் உடைந்திருக்கிறார்கள். திண்டாட்ட நிலையில் இருக்கிறார்கள். இது உடனடியாக கவனிக்கப்படவேண்டிய விஷயம் என்று குறிப்பிட விரும்புகிறேன். விவசாயிகளின் நன்மையைக் கருதி இதற்கு உடனடியாக சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்ண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது ஒரு லட்சம் கிணறுகளுக்கு மின்சார இணைப்பு தேவையாக இருக்கிறது. இதற்கு மின்சாரம் இணைப்பு ஏற்பட்டால் சுமார் 7 லட்சம் ஏக்கர் நிலம் சாகுபடிக்கு வரும். அவ்வாறு மின்சார இணைப்பு கொடுக்காததினால்தான் இப்போது பல லட்சக்

20th January 1961] [Sri P. S. Chinnadurai]

கணக்கான நிலங்கள் சாகுபடிக்கு இல்லாமல் இருக்கின்றன. விவசாயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று வாயலவில் சொன்னால் மட்டும் போதாது. இதற்கு வேண்டிய மின்சாரத்தை செய்து கொடுப்பதற்கு நாம் செயல் திட்டத்திலே ஒரு உருவான வகையில் முற்படவேண்டும். சென்ற ஆண்டிலே மின்சார கட்டணத்தை குறைக்கவேண்டுமென்று சட்டசபையிலே கோரிக்கை விடப்பட்டது. இதற்கு சட்டசபையிலே கனம் மின்சார அமைச்சர்கூட இந்த விஷயத்தை கவனிப்பதாகச் சொன்னார். அவர்கள் இன்னும் கவனிக்கிறார்கள். ஒரு ஆண்டு கழிந்தும் இன்னும் கவனிக்கிறார். இந்த முறையிலே விவசாயி களினுடைய கோரிக்கைகளை நிறைவேற்றினால் விவசாயிகளின் நிலை எப்படி உயரும் என்று நான் எண்ணுகிறேன். இது விவசாயி களையும் அவர்களுடைய குடும்பங்களையும் பாதிப்பதல்லாமல், நாட்டினுடைய பொருளாதார நிலையையும் பாதிப்பதாகும்.

மின்சார கட்டணத்தை குறைக்க வேண்டுமென்ற விவசாயி களின் கோரிக்கையை உடனடியாக கவனிக்க வேண்டுமென்று நான் அந்த ராஜ்ய சர்க்காரை இப்பொழுது குறிப்பாக வற் புறுத்த விரும்புகிறேன். ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டுகிற விஷயத்தில் போதுமான அக்கறை காட்டப்படவில்லை என்று நான் குற்றம் சாட்ட விரும்புகிறேன். ஹரிஜனங்களுக்கு ஒவ்வொரு ஆண்டிலும் இத்தனை ஆயிரம் வீடுகள் கட்டப்படுகிறது. இத்தனை ஆயிரம் மனைகள் வழங்கப்படும் என்று உறுதியாக தெரிவிக்கப்பட வில்லை இந்த சபையிலே. கனம் அமைச்சர் அவர்கள் அதைத் தெரிவித்தால் நல்லது. இத்தனை லட்சம் செலவாகும், இத்தனை கோடி செலவாகும் என்று சொல்லி எங்களை மயக்க வேண்டாம். அந்த எண்ணிக்கை எங்களை மயக்குகிறது. அதற்குப் பதிலாக கொஞ்சம் பெரிய மனது பண்ணி இன்னின்ன வேலைகள் செய் வோம், இத்தனை ஏக்கர்கள் பாசன வசதி பெறும் என்றளவில் சொல்லப் படுமானால் அல்லது இவ்வளவு வீடுகள் அவர்களுக்குக் கட்டிக்கொடுக்கப்படும் என்ற முறையில் சொல்வார்களேயானால் அது ஓரளவிற்கு திருப்தியளிப்பதாகயிருக்கும். வெறும் லட்சத்தையும், கோடியையும் போட்டு எங்களை திணறடிக்க வேண் டாம், என்று தங்கள் மூலம் நான் அவர்களை வேண்டிக் கொள்கிறேன். சிறு தொழில்கள் சம்பந்தமாக நமது சர்க்கார் வெகு அக்கரை காட்டி வருவதாக அடிக்கடி சொல்லப்பட்டு வருகிறது. கோயம்புத்தூர் ஜில்லாவில் சிறிய "பௌண்டரீஸ்", பம்ப் செட்டுகள் தயாரிக்கப்படுவதும், பல்வேறு இயந்திரங்கள் தயாரிப்பதற்கும் சிறிய சிறிய பௌண்டரீஸ் நிறைய இருக்கிறது. அவைகளுக்கு கோக் என்ற ஒரு வகை நிலக்கரி கிடைப்பதில்லை, போதுமான அளவிலே. அவை களுக்கு கோக் போதுமான அளவு கிடைக்கச் செய் வதற்கு நமது ராஜ்ய சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்? அந்த நிலக்கரியை அவர்களுக்கு கொண்டு வந்து சேர்ப்பதற்கு வேண்டிய வாகன்கள் கிடைக்கவில்லை என்ற குறை சென்ற பல மாதங்களுக்கு முன்பே இந்த அமைச் 10-30 a.m.

[Sri P. S. Chinnadurai] [20th January 1961

சரவையிடம் தெரிவிக்கப்பட்டது. ஆனால் அதற்கு ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டார்களா என்றால் இல்லை. அது, மத்திய சர்க்கார் விஷயம் என்று சொல்வார்கள். அது மத்திய அரசாங்க விஷயம் என்று சொல்லி நாம் வாளாயிருப்பது சரியல்ல. நமது ராஜ்யத்தில் தொழில் சிவனுள்ள முறையில் நடக்க வேண்டுமானால் அதற்குரிய மூலப்பொருள்கள் கிடைப்பதற்குரிய ஏற்பாடுகளில் அவசியம் இந்த ராஜ்ய சர்க்கார் கவனம் செலுத்தியாக வேண்டுமென்று நான் இங்கு உறுதியாக குறிப்பிட விரும்புகிறேன். மேலும் நமது மாநிலத்தில் ஆட்சிமொழி தமிழ் என்று நாம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். தமிழிலேதான் எல்லா வகையான வேலைகளும் இனிமேல் நடத்தப்படும் என்றளவு நம்பிக்கை தெரிவிக்கப்படுகிறது. கல்லூரிகளில் தமிழ் மொழியை போதனை மொழியாகக் கொண்டு எல்லா வகைப் பாடங்களையும் போதிப்பதற்கான ஏற்பாடுகளை விரைவாக நாங்கள் செய்து வருகிறோம் என்று சர்க்கார் கூறுகிறார்கள். அந்த அளவு இதை வரவேற்க வேண்டியதுதான். ஆயினும் அந்த வேகம் போதாது என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். ஏதோ சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்தது போல் ஒன்றிரண்டு கல்லூரிகளில் தமிழ் மொழியை போதனை மொழியாக ஆக்கி விட்டோம் என்று கூறி அந்தளவு திருப்தியடைந்து கொள்ளவோ அல்லது மக்களை திருப்தியடைந்து விடுமாறு கூறுவதோ சரியான பலனை அளிக்காது. தமிழ் தன்மையான தனது உயரிய ஸ்தானத்தை பெற்றாக வேண்டுமானால் இன்று அரசாங்கம் தமிழுக்கு ஆக்கம் கொடுத்து வளர்க்கிற வேகத்தை இன்னும் அதிகப்படுத்த வேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன். நீதி ஸ்தலங்களில் தமிழ் மொழி இன்னும் தனக்குரிய ஸ்தானத்தை பெறவில்லை. அதற்குரிய ஏற்பாடுகளை விரைவுபடுத்தவேண்டும். சட்ட புத்தகங்களை தயாரிப்பதும், தமிழிலேயே நிறைவேற்றுவதற்குமுள்ள தக்க ஏற்பாடுகளை செய்யவேண்டும். பொதுப் பணியாளர்களை தேர்ந்தெடுப்பதற்குள்ள ஆணைக்குழகம், பப்ளிக் சர்விஸ் கமிஷன் பரீட்சைகள் எல்லாம் ஆங்கிலத்தில்தான் வைக்கப்படுகிறது, தமிழிலே வைக்கப்படவில்லை என்று அறிகிறேன். தமிழ் மொழியில், கலைக்கல்லூரிகளில் பட்டம் பெற்று வெளி வருகிற மாணவன் இங்கு ஆங்கிலத்தில் தேர்வு எழுத வேண்டுமென்ற நிலை நீடிக்குமானால் அது நல்லதல்ல என்று இங்கு குறிப்பாக சொல்ல விரும்புகிறேன். தமிழுக்கு, கல்லூரிகளில் ஆக்கம் அளிப்பதென்றால் பப்ளிக் சர்வீஸ் கமிஷனில் ஒரு பெரிய புரட்சியை ஏற்படுத்தித்தான் ஆக வேண்டும். இதை உடனடியாக இந்த ஆண்டு செய்வதற்கு நமது சர்க்கார் முன்வர வேண்டுமென்று குறிப்பிட விரும்புகிறேன். நான் எனது பேச்சை இப்பொழுதே முடித்தால், நான் நினைக்கிறேன் கனம் முதல் அமைச்சர் அவர்களுக்கு அது மகிழ்ச்சி தராது என்று. இந்த மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்ற விஷயத்தில் அவர்கள் அதிக அக்கறை கொண்டிருக்கிறார்கள். அது குறித்து நான் பேச வேண்டுமென்றும் அவர்கள் வேண்டிக்கொண்டார்கள். இந்த மாநிலத்

20th January 1961] [Sri P. S. Chinnadurai]

திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைப்பது மிகச் சாதாரண விஷயம். அதற்கு ஒரு கிளர்ச்சியையோ அல்லது போராட்டத்தையோ இந்த அரசாங்கம் எதிர்ப்பார்க்கக்கூடாது. சாதாரணமாக உழைப்பு இல்லாமல் எதைப் பெற்றாலும் அதற்கு அவ்வளவு மகத்துவம் இராது என்று சொல்வார்கள். ஆகவே, தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்கு ஒரு கிளர்ச்சி அல்லது போராட்டம் நடத்தி அப்புறம் வேண்டுமானால் பெயர் வைக்கலாம் என்று நமது சர்க்கார் எண்ணிக் கொண்டிருந்தால், நான் நினைக்கவில்லை அப்படி அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்று, அப்படி எண்ணிக்கொண்டிருந்தால் அது நல்லதல்ல என்று பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். (குறுக்கீடு) என்ன அருமையான சந்தர்ப்பம் பாருங்கள். கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் யாரும் எதிர்பாராமல் இருந்த நேரத்தில் மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க இந்த ராஜ்ய சர்க்கார் இப்பொழுது தீர்மானித்து விட்டதென்று அறிவித்திருப்பார்களேயானால் அடேயப்பா எவ்வளவு பெரிய மகிழ்ச்சியை அது இந்த மாநில மக்கள் மத்தியில் உண்டாக்கியிருக்கும் என்று நான் சொல்லத் தேவையில்லை.

Sri A. V. P. ASAITHAMBI : "அடேயப்பா" என்ற வார்த்தை பார்லிமெண்டரியா ?

Sri P. S. CHINNADURAI : பழக்கத்தில் வருகிற மகிழ்ச்சியால் துளிர்கிற வார்த்தை என்றல்லாது இந்த சபையில் யாரையும் குறிப்பிடுவதல்ல அது. எவ்வளவு பெரிய மகிழ்ச்சியை அது மக்களிடையே உண்டாக்கியிருக்கும்? அந்த சந்தர்ப்பத்தை கவர்னர் பெருமான் அவர்கள் பயன்படுத்திக் கொள்ளவில்லை, ஏன் கவர்னர் பெருமான் அவர்கள் மூலம் இந்த ராஜ்ய சர்க்கார் பயன்படுத்திக்கொள்ளவில்லை என்பது ஒரு புதிர். அதற்குள்ள விடையை சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் கொடுப்பார்கள் என்று எதிர்ப்பார்க்கிறேன். ஒருக்கால் வரயிருக்கிற, உத்தியோகப்பற்றற்ற ஒரு நாளில் என்று தீர்மானம் இருக்கிறது. அந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற அப்புறம் செய்யலாம் என்று நினைக்கிறார்களோ என்னவோ நான் அறியேன். தமிழ் நாடு என்று பெயர் வைக்கவேண்டுமென்று அரசாங்கத்திற்கு சிபார்சு செய்யும் தீர்மானம் ஒன்று சட்டமன்றத்தின் முன்னால் இருக்கிறது. அதன் விவாதம் முடியவில்லை. அதை முடித்துக்கொண்டு அப்புறம் செய்யலாம் என்று காத்துக் கொண்டிருக்கிறார்களோ என்னவோ தெரியாது. ஒருக்கால் அப்படியிருந்தால் அதுவும் வரவேற்கத்தக்கதுதான் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இங்கிலாந்து நாட்டு அரசியார் நமது நாட்டிற்கு வருவது, அதிலும் குறிப்பாக சென்னை நகருக்கு வருவது மிக மகிழ்ச்சி எல்லோருக்கும் தருவதாயிருக்கும். ஒரு வகையில் சாதாரண நிகழ்ச்சி என்றாலும் மகிழ்ச்சி ஏனென்றால் மழையால் பாதிக்கப்பட்ட பாதைகள் எல்லாம் சீர்படுகின்றன. வேறு நாட்களாகயிருந்தால் இவ்வளவு துரிதத்தில் இதற்குரிய நடவடிக்கைகள் கார்ப்பரேஷனால் எடுக்கப் பட்டிருக்

[Sri P. S. Chinnadurai] [20th January 1961

குமோ என்று தெரியாது. ஆனால் இப்பொழுது எடுக்கப்பட்டிருக் கின்றன அரசாங்கத்தின் உதவியோடுகூட... எனக்கு ஒரு அவா. அரசியார் அவர்கள் பெரிய தெருக்களில் மட்டும் பவனி வராமல் சிறிய சிறிய தெருக்களிலும் பவனி வருவதற்கு நாதர் அவர்கள் மனமுவந்து ஏற்பாடு செய்தால் நான் நம்புகிறேன் பெப்ரவரி 19-ம் தேதிக்கு முன்பாக எல்லாத் தெருக்களும் நல்ல முறையில் செப்பனிடப்பட்டு இந்த ராஜ்ய மக்கள் இங்கிலாந்து நாட்டு அரசி யாரின் வருகையைக் குறித்த நினைவு மனதிலிருந்து அகற்றப்படா மலிருப்பதற்குரிய ஒரு நிலையை உண்டுபண்ண முடியும் என்று எதிர்ப்பார்க்கிறேன். நிதியமைச்சர் அவர்கள் வந்தால் ஒன்று சொல்லலாம் என்று நினைத்தேன். அவர்கள் வந்து விட்டார்கள். அதைச் சொல்லிவிட்டு நிறுத்திக் கொள்கிறேன். இங்கிருந்து ஒரு அமைச்சரை மத்திய அரசுக்கு அனுப்பவேண்டுமென்று கனம் முதல் அமைச்சர் அவர்கள் நினைத்து, கனம் நிதியமைச்சர் அவர்கள் அங்கு போய் வீற்றிருக்க எண்ணுவார்களேயானால் நான் சொல்கிறேன், உண்மையில் அதை இந்த மாநிலம் வர வேற்கும், என் கட்சியும் வரவேற்கும். கட்சிகள் இடையே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். தனி நபர் என்ற முறையில் எனக்கும் அவருக்கும் ஏதாவது வேறுபாடுகள் இருக்கக்கூடும். இருந்தாலும்கூட அவர்கள் மத்திய அரசில் வீற்றிருந்து இம் மாநிலத்திற்கு சேவை செய்ய அவர்கள் மனம் ஒப்பி முன் வருவார் களேயானால் அவர்களை அனுப்பி வைக்க முதல் அமைச்சர் அவர் களும் முன் வருவார்களேயானால் மகிழ்வோடு இம்மாநிலம் அதை வரவேற்கும். (குறுக்கீடு)

நான் அதைத்தான் சூசகமாக குறிப்பிட விரும்புகிறேன். நிதி யமைச்சர் அவர்கள் அங்கு செல்ல விரும்புவார்களேயானால் நாங்கள் அவர்களுக்கு இடம் அளிப்போம் என்று சொல்லிக் கொண்டு அவர்கள் அதற்கு முன் வரவேண்டுமென்று வேண்டிக் கொண்டு எனது வார்த்தையை இதோடு முடித்துக்கொள்கிறேன்.

SRI V. SANKARAN: **கனம் தலைவர் அவர்களே, கவர்னர்** பெருமான் அவர்களுடைய உரையை வரவேற்று ஒரு சில வார்த் தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கினால் ஏற்பட்ட நஷ்டங்களுக்கு நிவாரணம் எடுத்துக்கொண்டிருப்பதாகவும் அதற் காக பல பாராட்டத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருப்ப தாகவும் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதில் முக்கிய மாக பெரிய நகரங்களில் சமீபத்தில் வெள்ள ஆபத்துக்கள் ஏற் பட்டன. அதிலிருந்து நாம் முக்கியமான ஒரு படிப்பினையை அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அதாவது முக்கியமாக பெரிய நகரங்களில் நதிகளினுடைய ஆற்றோரங்களிலும் தாழ்வான பிரதேசங்களிலும் ஏழை மக்கள் தாங்களாகவே வீடுகளை அமைத் துக்கொண்டு வாழ்ந்து கொண்டு வருகிறார்கள். இதன் காரண மாக வெள்ளப்பெருக்கு வருகின்ற நேரத்தில் வருடா வருடம் ரெக்கரிங் செலவாக ஆயிரக்கணக்கில் ரூபாய் செலவு செய்ய வேண்டிய நிலை ஏற்படுகிறது. அதோடு பலவிதமான நஷ்டங்

20th January 1961] [Sri V. Sankaran]

களும் ஏற்படுகின்றன. இதனால் அடிக்கடி சர்க்காருக்கும் சரி, தனிப்பட்டவர்களுக்கும் சரி பலவிதமான கஷ்டங்கள் ஏற்படு கின்றன. இதற்காக நான்-அபிஷியலாகவும் பணம் திரட்ட வேண்டிய நிலை ஏற்படுகின்றது. சர்க்காரிலிருந்தும் வருடா வருடம் அதிகமான அளவில் செலவு செய்யவேண்டி நேரிடுகிறது. இதை போக்குவதற்காக நிரந்தரமாக ஒரு உபாயம் செய்ய வேண்டும். அதாவது தாழ்வான இடங்களிலும் நதி ஓரங்களிலும் இருக்கின்ற புறம்போக்கு இடங்களில் ஏழை மக்கள் வீடுகள் கட்டு கிறார்கள். இம்மாதிரி வீடுகள் கட்டிக்கொண்டு வாழ்ந்து வரும் ஏழை மக்களை அந்த இடத்திலிருந்து மாற்றி அவர்களுக்கு மாற்றிடம் கொடுக்கவேண்டும். அதல்லாமல் அங்கேயிருந்து உடனடியாக வெளியேற்றி நடுத்தெருவில் விட்டுவிட வேண்டும் என்று சொல்லவில்லை. இதற்காக மாற்றிடங்கள் கொடுக்க ஸ்தல ஸ்தாபனங்கள் முன் வரவேண்டும். அது மட்டுமல்ல, சென்னை நகரத்தைப் பொறுத்தவரை காலனி ஸ்கீம் என்ற ஸ்கீம் ஏற் படுத்தி அதன் மூலம் ஒவ்வொரு நபருக்கும் பேஸ்மென்ட் கட்டிக் கொடுத்து இரண்டு சென்ட் நிலமும் வீடு கட்டுவதற்காக விட்டுக் கொடுப்பதாக கேள்விப்படுகிறேன். இதேபோன்று மற்ற நகரங் களில் இருக்கும் ஏழை மக்களுக்கும் கொடுத்தாலினால் மிகவும் நன்றாக இருக்கும். இதற்கு வேண்டிய புறம்போக்கு நிலங்களை தேர்ந்தெடுத்து அந்த இடங்களில் அவர்களுக்கு வீட்டுவசதி செய்து கொடுக்கவேண்டும். இப்போது அவர்கள் விலை மதிப் பேறிய (வால்யுபில் ஸைட்ஸ்) பல புறம்போக்கு இடங்களில் ஆக்ரமித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த இடங்களை எல்லாம் காலி செய்ய வேண்டும். அதற்காக இப்போது அதிலிருக்கின்றவர் களுக்கு மாற்றிடம் கொடுக்கவேண்டும். அதற்காக ஐந்து மைல் அல்லது பத்து மைல் தள்ளி அவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பதில் பிரயோசனம் இல்லை. அவர்களது வேலைக்கு தகுந்தவாறு வசதியான இடங்களில் வசதி செய்து கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்தால் அடிக்கடி வெள்ளப் பெருக்கு போன்ற ஆபத்துகள் நேரிடாமல் இருக்கும். அதோடு சர்க்கா ருக்கும் விலையுயர்ந்த பல இடங்கள் கிடைக்கும். ஆகவே இதில் கவனம் செலுத்தி கொஞ்சம் நிதி செலவழிந்தாலும் பரவாயில்லை, இதற்கான வழிவகைகளை உடனடியாக செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கவர்னர் பெருமான் அவர்களது உரையில் பெரிய பாசனத் திட்டங்களைப்பற்றியும், சிறிய நீர்ப் பாசனத் திட்டங்களைப்பற்றியும் குறிப்பிட்டு இதற்காக மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் இரண்டு மடங்கு தொகை அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருப்பது மிகவும் வர வேற்கக் கூடிய விஷயம். குறிப்பாக நெய்வேலியைப்பற்றி அவர் களது அறிக்கையில் இரண்டு மூன்று இடங்களில் குறிப்பிட்டிருக் கிறார்கள். முக்கியமாக ஏற்கனவே இதற்கு குறிப்பிட்டிருந்த அளவு 35 லட்சம் டன், அது இப்போது 45 லட்சம் டன் அளவுக்கு உயர்த்துவதற்கு திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது என்றும், அதோடு இதிலுள்ள இயந்திரங்களைக் கொண்டு 60

[Sri V. Sankaran] [20th January 1961

லட்சம் டன் அளவுக்கு உயர்த்தலாம் என்ற நம்பிக்கையும் இருக்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இன்னொரு இடத்தில் " இந்த நிலையில், நெய்வேலி பழுப்பு நிலக்கரியை மற்ற நிலக்கரிக்குப் பதிலாகப் பயன்படுத்தலாம் என்று நிரூபிக்கப் பட்டவுடன் நமது உருக்கு ஆலைத் திட்டத்திற்கு அனுமதி கிடைத்து விடும் என்று நாம் நிச்சயமாக எதிர்பார்க்கலாம் " என்று ஏழாவது பாராவில் சொல்லிவிட்டு, அடுத்தபடியாக எட்டாவது பாராவில் "மின்சார நிலயம், உரத் தொழிற்சாலை, பிரிக்கட்டிங் தொழிற்சாலை, களிமண் சுத்திகரிப்பு தொழிற்சாலை போன்ற மற்ற திட்டங்களில் எல்லாம் வேலை திருப்திகரமாய் நடந் தேறி வருகிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் உண்மையில் அங்கு சென்று பார்த்து வந்ததில் ஒரு குறிப்பான விஷயத்தை காண முடிந்தது. ஒரு கமிட்டியில் நாங்கள் பல அங்கத்தினர்கள் அங்கு போயிருந்தோம். அங்கு நடைபெறுகின்ற பல விஷயங்களைப்பற்றி விசாரித்ததில் ஒரு முக்கியமான விஷயத்தை அவர்கள் தெரிவித்தார்கள். முக்கியமாக நான் அதை இங்கு சொல்ல வேண்டியிருக்கிறது. அதாவது முக்கியமாக பிரிக்கட்டிங் தொழிற்சாலை, கார்பனைஸிங் தொழிற்சாலை இவை களை ஆரம்பிப்பதற்கு இதுவரையிலும் மத்திய சர்க்காரிலிருந்து அனுமதி வரவில்லை, இதனால் இதற்கான வேலைகள் எல்லாம் தடைப் பட்டு நிற்கின்றன. ஒரே சமயத்தில் ஃபெர்டிலைசர், தெர்மல் ஸ்டேஷன், பிரிக்கட்டிங், கார்பனைஸிங் போன்ற எல்லா தொழில் களும் ஒரே சமயத்தில் ஆரம்பித்தால்தான் எல்லா வேலைகளும் நன்றாக நடைபெறும். அவ்விதம் எல்லா தொழிற்சாலையும் இயங்க ஆரம்பித்தால்தான் 1961 கடைசியிலோ அல்லது 1962 ஆரம்பத் திலோ நிலக்கரி எடுக்க முடியும் என்று தெரிவித்தார்கள். அதோடு நிலக்கரியை எடுத்து ஸ்டோர் பண்ண முடியாது. தோண்டி எடுத்தவுடன் அதை உபயோகப்படுத்த வேண்டும், தாமதப்படுத்தக்கூடாது என்றும் தெரிவித்தார், அதை தெரிவித்தவர் அங்கு பொறுப்பாக இருக்கின்ற ஒருவர் தான். கோடிக் கணக்கான ரூபாய் செலவு செய்து விட்டு இதற்கான அனுமதி மத்திய சர்க்காரிலிருந்து வராத காரணத்தினால் தாமதம் ஏற்படுகிறது என்று தெரிவிக்கப் பட்டது. இதற்கான அனுமதியை மத்திய சர்க்காரிட மிருந்து எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம் என்றும் தெரிவித் தார்கள். இதுவரையிலும் அதற்கான அனுமதி வந்து சேர்ந்த தாக தெரியவில்லை. ஆகவே அதற்கான அனுமதியை நமது அரசாங்கம் உடனடியாக வாங்கவேண்டும். அப்போதுதான் திருப்திகரமாக வேலைகளை ஆரம்பிக்க முடியும், ஆகவே இதற்கான அனுமதியை பெற வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக கல்வி சம்பந்தமாக 32 கோடி ரூபாய் செல வழிக்கப் போவதாக சொல்லப்பட்டிருக்கிறது. நமது முதல் அமைச்சர் அவர்கள் சூசகமாக பல இடங்களில் குறிப்பிட்டிருப் பது போன்று 10-வது வரையிலும் இலவசக் கல்வி அளிக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த தொகை ஒதுக்கப்பட்

டிருக்கிறது என்று நான் நினைக்கின்றேன். அடுத்தபடியாக ஸ்காலர்ஷிப் சம்பந்தமாக ஒரு கொள்கையை ஏற்படுத்தப்போவ தாக சொன்னார்கள். முக்கியமாக எந்த வகுப்பினர் என்று பார்க் காமல் ஏழ்மையாய் இருக்கின்ற முதல்தர மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பது என்ற முறை வகுக்கப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டது. இதைப் பற்றி பரி சிலனை செய்து வருகிறோம் என்றுதான் கடந்த ஓராண்டு காலமாக சொல்லப்பட்டு வருகிறது. அது இன்னும் அமல் செய்யப்பட்டதாக தெரியவில்லை. இன்னும் நம் முடைய பதவி காலம் (பீரியட்) தீர்வதற்கு ஒரு வருடம்தான் இருக்கிறது. அதுவரையிலும் இந்தத் திட்டம் வராமல் போய் விடுமோ என்று நான் அச்சப்படுகிறேன். ஆகவே திறமையாய் இருக்கின்ற மாணவர்களுக்கு, ஏழ்மையின் காரணமாக படிக்க முடியாத நிலையிருந்தால் அதற்கு நிவர்த்தி செய்கின்ற முறையில் அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கவேண்டும் என்ற திட்டத்தை உடனடியாக கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கல்வி சம்பந்தமாக சொல்லும்போது நம் முடைய ராஜ்யத்திற்கு இன்னொரு யூனிவர்ஸிட்டி தேவை என்பதை பல தடவை சொல்லப்பட்டு வந்திருக்கிறது. இதைப்பற்றி சொல்லும்போது நமது அமைச்சர் அவர்கள் பல தடவைகளிலும் இதை வெளிப்படையாகவே இந்த யூனிவர்ஸிட்டியை மதுரையில் ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அப்படி யிருந்தும் சமீபத்தில் இதைப்பற்றி ஆலோசிப்பதற்காக தென் மாவட்டத்திலுள்ள எல்லா பிரின்ஸிபால்களும் ஸிண்டிகேட் மெம் பர்களும் வைஸ்-சான்ஸிலர் தலைமையில் கூடியிருக்கிறார்கள். அந்தக் கூட்டத்தில் இப்போது நமது மாகாணத்திற்கு இன்னொரு யூனிவர்ஸிட்டி தேவையில்லை, அப்படியிருந்தாலும் டெக்னிக்கல் யூனிவர்ஸிட்டியை கோயம்புத்தூரில் ஆரம்பித்தால் போதும் என்று அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். அதில் உண்மை யாகவே என்போன்றவர்களுக்கு ஐயப்பாடு இருக்கிறது. இப் போது நமது மாகாணத்திற்கு ஒரு யூனிவர்ஸிட்டி தேவையில்லை என்று சொல்லும்படியான அளவுக்கு எந்தவிதமான காரணங் களும் இல்லை. ஏதோ இப்போது அந்தக் கூட்டத்தில் இருக்கின்ற வர்கள் இப்போது அவர்களுக்கு இருக்கக்கூடிய ஆதிபத்தியம் எங்கே போய்விடுமோ என்று எண்ணித்தான் இம்மாதிரி அபிப் பிராயம் தெரிவித்திருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். அவர் களுடைய ஆதிபத்தியம் எங்கே குறைந்து போய் விடுமோ என்று எண்ணித்தான், அந்த பயத்தினால்தான் இன்னொரு யூனிவர் ஸிட்டிக்கு தேவையில்லை என்று அபிப்பிராயம் தெரிவித்திருக் கிறார்கள். இரண்டாவது இன்னொரு பயம் இருக்கிறது. இன்னொரு யூனிவர்ஸிட்டி ஆரம்பித்தால், இப்போது தமிழுக்கு முக்கியத் துவம் கொடுக்கவேண்டும் என்று எல்லோரும் சொல்லிக் கொண்டிருக்கின்ற காரணத்தினால், அண்ணாமலை சர்வகலாசாலை மாதிரி இந்த சர்வகலாசாலையை ஆரம்பித்து விட்டால் என்ன செய்வது, ஆகவே அதை இப்போதே நிறுத்தி விட்டால் நல்லது

[Sri V. Sankaran] [20th January 1961

என்ற கருத்தோடு அவர்கள் செய்வதாக நான் நினைக்கிறேன். அவர்கள் சொல்வதை ஒத்துக்கொள்வது சரியாகாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதோடு டெக்னிகல் யூனிவர்ஸிட்டி என்று தனியாக வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. இப்போதுள்ள சாதாரண யூனிவர்ஸிட்டி எஜுகேஷனிலேயே டெக்னலாஜிகல் ஸ்டடிக்கு அதிகமாக இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. தனியாக அந்த மாதிரி ஒரு யூனிவர்ஸிட்டி தேவையில்லை. நான் ஏன் இதை வற்புறுத்துச் சொல்லுகிறேன் என்று சொன்னால் இதை ஒரு லீவ்டாக அரசாங்கம் உபயோகப்படுத்திக் கொள்ளக் கூடாது. சம்பந்தப்பட்டவர்களே சொல்லியிருக்கிறார்கள் என்று சொல்லக்கூடாது. அதிகமாக தொழில்கள் கோயம்புத்தூர் ஜில்லாவில் குவிந்திருக்கிறது. அவர்கள் வெளியே போயும் தொழில் நடத்த அனுமதி கொடுத்திருக்கும்போது இந்தக் கோரிக்கையை அவர்கள் கண்டிப்பாக விட்டுவிட வேண்டும். இதை கண்டிப்பாக மதுரைக்குக் கொடுக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கடைசியில் காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போன கதையாக ஆகிவிடக் கூடாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

காகிதத் தொழிற்சாலை சீக்கிரம் ஆரம்பிக்கப் போகிறது என்று சொன்னார்கள். நம்முடைய ராஜ்யத்திற்கு காகிதத் தொழிற்சாலை மிகவும் அவசியம். அதை சீக்கிரத்தில் ஆரம்பிக்கவேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் அறிவாளிகள் அதிகமாக இருந்தும் காகிதத் தொழிற்சாலை இல்லாதது வருந்தத் தக்க விஷயம். அதை அவசியம் உடனடியாக ஆரம்பிக்கவேண்டும்.

அடுத்தபடியாக ஸேல்ஸ்-டாக்ஸ் சம்பந்தமாக அநேகமாக இப்போது வரக்கூடிய பட்ஜெட்டிலேதான் கன்ஸெஷன் கொடுக்கலாம். அதை மறுபடியும் பரிசீலனை செய்து முக்கியமாக ஒரு சில பொருள்களுக்கு விலக்குக் கொடுக்கவேண்டும். உதாரணமாக, நெல், பால், வறுகடலை, பட்டாணி போன்றவைகள் விஷயத்தில் விலக்கு கொடுக்கவேண்டியது அவசியம். ஏன் விலக்கு கொடுக்கவேண்டும் என்பதற்கு காரணங்களை மறுபடியும் சொல்ல வேண்டியதில்லை. ஒவ்வொரு வருஷமும் அதைப் பற்றிச் சொல்லியிருக்கிறோம். இந்த பட்ஜெட்டில் இவைகளுக்கு விலக்கு கொடுத்தால் ஒரு நல்ல "ஜெஸ்சர்" ஆக இருக்கும்.

அடுத்தபடியாக தோல் சாமான்கள் செய்வதிலே குடிசைத் தொழில் முறையில் மணிபர்ஸ், டாக்குமெண்டரி கேஸ்கள் போன்றவைகளை 10, 20 பேர்கள் செய்து வெளி நாடுகளுக்குக்கூட அனுப்புகிறார்கள். அவைகளுக்கு 5% வரி இருப்பதனால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அதே மாதிரி சோப் தொழிலும் பாதிக்கப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக அப்பளம். பாக்கெட்டெட் குட்ஸ் என்று ராப்பிங் இருக்கிறது என்று 6% வரி போட்டு விடுகிறார்கள். அதை 2% ஆகக் குறைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

20th January 1961] [Sri V. Sankaran]

அடுத்தபடியாக பல நல்ல சட்டங்கள் செய்யப்பட்டாலும் அதன் கீழுள்ள ரூல்ஸ் சீக்கிரமாகச் செய்யப்படுவதில்லை. நல்ல மாறுதல்கள் செய்தாலும் அதனுடைய பலன் மக்களுக்குக் கிடைப்பதில்லை. உதாரணமாக இப்போது சமீபத்தில் வீட்டு வாடகைச் சட்டம் நிறைவேறியிருந்தும் அதன் கீழ் ரூல்ஸ் செய்யப்படவில்லை. முக்கியமாக ரூல்ஸ் உடனடியாகக் கொண்டுவரப் படவேண்டும். இல்லாவிட்டால் மக்கள் நல்ல நல்ல மாறுதல்களை அனுபவிக்க முடியாது.

அடுத்தபடியாக ஸ்டேட் லெஜிஸ்லேச்சர் சம்பந்தப்பட்ட மட்டில் அங்கத்தினர்களுக்கு டிரான்ஸ்போர்ட் வசதி கொடுக்கப் படுகிறது. இந்த வண்டிகள் ஓடுவதில் டிரான்ஸ்போர்ட் டிபார்ட் மெண்டுக்கு நஷ்டம் ஆகிறது என்று ஒவ்வொரு ஸெஷன் ஆரம் பிக்கும்போதும் ஏதாவது தடங்கல் செய்வதாகத் தெரிகிறது. இது மிகவும் தவறான காரியம். பொது இண்டரஸ்டுக்காகச் செய்யும் போது இந்த மாதிரி மனப்பான்மை கொள்ளக்கூடாது. இம் மாதிரி மனப்பான்மை கொண்டுள்ள டைரெக்டர் அவர்களை குறிப் பாக இண்டஸ்ட்ரீஸ் மினிஸ்டர் அவர்கள் சென்ஷூர் செய்ய வேண்டும். அதோடு ஒவ்வொரு தடவையும் அம்மாதிரி வேண்டு மென்று செய்யாமல் அமைச்சர் அவர்கள் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக டூரிஸம் சம்பந்தமாக மதுரை முதலிய இடங்களில் நல்ல முறையில் வசதிகள் செய்துகொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. N. PALANISWAMI GOUNDER :** கனம் அவைத் தலைவர் அவர்களே, நேற்றைய தினம் கவர்னர் பெருமான் அவர்கள் பேசியதை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் வருத்தம் தெரிவிப்பதாகச் சொன்னார்கள். நாம் 1961-ம் வருஷத்திலே ஜனவரி மாதத்தில் சந்தோஷமாகக் கூடியிருக்கிறோம். அந்த வகையில் பிரிட்டிஷ் ராணி நமது நாட்டுக்கு வருவதைப் பற்றி மகிழ்ச்சி தெரிவிக்கவேண்டும். பல ஆண்டுகளாக நம்மோடு இருந்துவிட்டுச் சென்றவர்கள் நாட்டுக்கு வருவதைப்பற்றி மகிழ்ச்சியடைய வேண்டும். நம்முடைய தமிழ் நாட்டினுடைய பண்பாடு வீட்டுக்கு யார் விருந்தாளி வந்தாலும் அவர்களை வர வேற்பதாகும். நம்மிடையே பல ஆண்டுகாலம் இருந்து பிரிந்த வர்களை நாம் மகிழ்ச்சியோடு வரவேற்கவேண்டும். நம்முடைய பிரதமர் நேருஜி அவர்கள் வெளிநாடுகளுக்குச் செல்லும்போது நாம் பார்க்கிறோம். அங்கெல்லாம் அதை ஒரு பெரிய விழா வாகவே கொண்டாடுகிறார்கள். அப்படி இருக்கும்போது ராணி வருவதை ஒரு சிறிய நிகழ்ச்சியாகச் சொல்வது சரியாகாது.

சென்னை ராஜ்யத்தில் சென்ற ஆண்டில் நல்ல முறையில் பருவ மழை பெய்திருக்கிறது. சென்னை ராஜ்யம் இன்று பாரத நாட்டில் —மற்ற ராஜ்யங்களைப் பார்க்கும்போது, கேரளம், மைசூர், ஆந்திரம் முதலிய ராஜ்யங்களில் மந்திரி சபையிலும் சட்டசபை

யிலும் பாகுபாடுகள் இருக்கின்றன—பூசல்கள் ஏதுமில்லாமல் நேருஜி போன்றவர்கள் பாராட்டக்கூடிய முறையில் முதலமைச்சர் காமராஜர் அவர்கள் தலைமையில் நல்ல முறையில் இருந்து வருகிறது. சட்டசபையை எடுத்துக்கொண்டாலும் சென்னை சட்டசபையானது பாரத நாட்டுக்கே வழிகாட்டியாக இருக்கிறது என்பதைப்பற்றி நாமெல்லாரும் பெருமை கொள்ள வேண்டும். நான் ஆரம்பத்திலேயே கூறியபடி சந்தோஷமாகக் கூடும்போது, வருத்தம் தெரிவிப்பது என்று சொன்னால், அவர்கள் எதிர்க்கட்சி என்ற பாணியில் பேசியிருப்பார்களே தவிர அந்த உள்ளத்தோடு பேசியிருக்க மாட்டார் என்று நினைக்கிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரையில் முக்கியமாக சில விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மின்சார அபிவிருத்திக்காக மூன்றாவது திட்டத்தில் 101 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். குந்தாத் திட்டத்தில் இரண்டாவது ஸ்டேஜ் முடிந்து மூன்றாவது ஸ்டேஜும் ஆரம்பமாகிவிட்டது. நம்முடைய ராஜ்யமானது மற்ற ராஜ்யங்களைவிட மின்சாரம் சம்பந்தப்பட்ட மட்டில் மிகவும் முன்னேறியிருக்கிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். நம் ராஜ்யம் மற்ற ராஜ்யங்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கிறது. நாட்டுக்கு விவசாயம் மட்டுமல்லாமல் கைத்தொழில் வளர்ச்சிக்கும் மின்சாரம் முக்கியமானது.

விவசாயத் தொழில் மக்களுக்கு அடிப்படையாக இருக்கிறது. விவசாயிகளுக்கு பலவகைகளில் சர்க்கார் உதவி செய்கிறது. விவசாயிகளுக்கு கிணறு வெட்ட, பம்ப் செட் வைத்துக்கொள்ள, உரம் வாங்கிக்கொள்ள பல வகைகளில் உதவிகள் அளிப்பதன் காரணமாக விவசாயம் நல்ல முறையில் முன்னேறியிருக்கிறது. கவர்னர் அவர்களுடைய உரையில் பரம்பிக்குளத் திட்டத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். 11–30 a.m.

பரம்பிக்குளத் திட்டம் ஒரு முக்கியமான திட்டம். அது கோயம்புத்தூர் ஜில்லாவிலே 9 தாலுக்காக்களுக்கு, குறிப்பாக 4 தாலுக்காக்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். பல்லடம், உடுமல்பேட்டை போன்ற தாலுக்காக்களுக்கு, நல்லதொரு பருவ மழை இல்லாத தாலுக்காக்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். தமிழ் நாட்டிலே இன்றைய தினம் தஞ்சாவூர் போன்ற இடங்களில் பெரு மழை பெய்து சேதத்தை விளைவித்து உள்ளது. ஆனால் பல்லடம், தாராபுரம் போன்ற தாலுக்காக்களிலே பருவ மழையே இல்லாது பஞ்சம் ஏற்பட்டு இருக்கிறது. இந்த பருவ மழை இல்லாத காரணத்தினால் 25 சதவிகிதம் கூட வெள்ளாமை கிடைக்காமல் இருக்கிறது. ஒருசில இடங்களில் பருவ மழை பெய்தும்கூட இன்றைய தினம் ஒன்றும் விளையாமல் இருக்கிறது. அதைப்பற்றி பல்லடம் தொகுதியைச் சேர்ந்த கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்கள் ஒன்றும் குறிப்பிடாததைக் குறித்து வருத்தப்படுகிறேன். இன்றையதினம் இப்படிப்பட்ட ஒரு தருணத்தில், வாட்சியாக இருக்கும் ஒரு

பிரதேசத்திற்கு பரம்பிக்குளத் திட்டம் வருவதானது மிகவும் உதவியாக இருக்கும். அதை உற்சாகத்தோடு மக்கள் வரவேற்பார்கள் என்று எதிர்பார்க்கலாம். அது 2½ லட்சம் ஏக்கராவுக்கு பாசனத்திற்கு உபயோகப்பட இருக்கிறது. அப்படிப்பட்ட பாசனத்தை, முக்கியமாக பருவ மழை இல்லாத பல்லடம், தாராபுரம் போன்ற தாலுக்காக்களுக்கு அதிகமாக விட்டு உதவும்படியாக நமது நிதி மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்றைய தினம் குந்தா மின்சாரத் திட்டம் என்னும் ஒரு பெரிய திட்டத்தை கனடா சர்க்கார் உதவியுடன் தொடங்கப்பட்டு, முதலாவது ஸ்டேஜ், இரண்டாவது ஸ்டேஜ் என்று வேலைகள் பூர்த்தி செய்யப்பட்டு வருகிறது. நம் நாட்டிற்கு இன்றைய தினம் மின்சாரம் மிகவும் தேவையாகயுள்ளது. பருவ மழை இல்லாத பிரதேசங்களுக்கு மின்சாரம் பலவகைகளிலும் உபயோகப்படுகின்றது. கைத்தொழில் வளர்ச்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும், விவசாய வளர்ச்சிக்கும் மின்சாரம் பல வகைகளிலும் உபயோகப்படும் என்று எதிர்ப்பார்க்கப்படுகின்றது. அதேபோல் இன்றைய தினம் நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டம் நமது திட்டங்களுள் ஒரு பெரிய திட்டமாக இருக்கிறது. இந்தத் திட்டத்தின் மூலம் பல லட்சம் பேர்களுக்கு வேலை கிடைக்குமென்று எதிர்ப்பார்க்கப்படுகிறது. இதுபோன்ற திட்டங்கள் மக்களுக்கு பல வகைகளிலும் உதவியாக இருக்கும். இப்படி நாம் சுதந்திரம் பெற்ற 13 ஆண்டுகளுக்குள் பெரிய பெரிய திட்டங்களையெல்லாம் நிறைவேற்றியிருப்பதை நான் வரவேற்கிறேன்.

இப்போது சென்னையில் ஒரு தொழிற்பேட்டை இருக்கிறது. அதைப்போல் ஒரு தொழிற்பேட்டையை கோயம்புத்தூர் ஜில்லாவிலும் ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. அதை இப்போது கோயம்புத்தூரிலே நிறுவ இருப்பதாக அறிகிறேன். அதைத் தவிர்த்து பொருளாதாரத் துறையிலும், விவசாயத் துறையிலும் பிற்போக்கடைந்துள்ள பல்லடம், தாராபுரம், உடுமல்பேட்டை போன்ற தாலுக்காக்களில் நிறுவினால் அங்கு மிகவும் பிற்போக்காக உள்ள மக்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். அதோடு இப்போது மண் அரிப்பைத் தடுப்பதற்காக பல கோடி ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருப்பதாக அறிகிறேன். முக்கியமாக என்னுடைய தாலுக்காவைப் பொறுத்தவரையில் இந்த மண் அரிப்புத் திட்டத்தினால் எந்தவிதமான நன்மையும் ஏற்படப்போவதாகத் தெரியவில்லை. ஆகவே, இத்திட்டத்தை கைவிட்டு விட்டு, அந்தவகையிலே செலவிடுவதற்குப் பதிலாக குட்டை, குளம் போன்றவைகள் வெட்டி, நீர்ப்பாசனத்திற்கு வசதி செய்தால் நல்லதாய் இருக்குமென்று நம்புகிறேன்.

இன்றைய தினம் நமது ராஜ்யத்திலே ஆங்காங்கே சர்க்கார் விதைப்பண்ணைகள் பல ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன. இந்த விதைப்பண்ணைகளினால் சர்க்காருக்குப் பல லட்ச ரூபாய்கள் நஷ்டம் ஏற்பட்டு, நஷ்டத்தில் வேலை செய்வதாகக் கூறப்படுகிறது.

[Sri K. N. Palaniswami Gounder] [20th January 1961

இப்படி சர்க்கார் நடத்தும் விதைப்பண்ணைகளை, தனிப்பட்டவர்களுக்குக் கொடுத்தால் அவர்கள் நல்லமுறையிலும் நடத்துவார்கள். சர்க்காருக்கும் எவ்விதமான நஷ்டமும் ஏற்படாது. விவசாயத்துறையிலே நல்ல அனுபவமுள்ள தனிப்பட்டவர்களிடம் இந்த விதைப் பண்ணைகளைக் கொடுத்தால், விவசாயிகளுக்கும் நல்ல விதைகள் தக்க சமயங்களிலே கிடைக்கும், சர்க்காருக்கும் நஷ்டம் ஏற்படாது.

**(Mr. Speaker in the Chair.)**

இப்படியாக நமது சர்க்கார் சிறு சிறு திட்டங்களையும், பல பெரிய திட்டங்களையும் நிறைவேற்றி பல வகைகளிலும் நாம் முன்னேறி இருக்கிறோம். இந்த ராஜ்யத்திலே மின்சாரம், ரோடு போக்குவரத்து, கல்வி போன்ற துறைகளிலே நாம் மிகவும் முன்னேறியிருக்கிறோம். ஆனல் மக்களுக்கு மிகவும் முக்கியமான வைத்தியத் துறையிலே அவ்வளவாக பெருமளவுக்கு முன்னேறவில்லை. மக்களுக்கு அத்தியாவசியமான தேவைகளுள் ஒன்று வைத்திய வசதியாகும். கோயம்புத்தூர் ஜில்லாவைப் பொறுத்த வரையில் எடுத்துக்கொண்டால், அங்குள்ள பெரிய ஆஸ்பத்திரியில் 750 படுக்கைகளே இன்றைய தினம் இருக்கிறது. இது இன்றுள்ள ஜனப் பெருக்கத்திற்குப் போதாது. குறைந்தது 2,000 படுக்கைகளாவது வேண்டும். திருப்பூர் தாலுக்காவுக்குள்ள ஹெட் குவார்டர்ஸ் ஆஸ்பத்திரியிலே தற்போது 32 படுக்கைகள்தான் இருக்கின்றன. இதுவும் போதாது. குறைந்தது 100 படுக்கைகளாவது வேண்டும். இன்றைய சுகாதார அமைப்பின்கீழ் இவைகளையெல்லாம் அமுலுக்குக் கொண்டுவரவேண்டுமென்று கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். பணக்காரர்களுக்குப் பல தனிப்பட்ட வைத்தியர்கள் இருக்கிறார்கள். ஆனல் ஏழைகளுக்கு சர்க்கார் ஆஸ்பத்திரியைத் தவிர வேறு இடங்களுக்குப் போக வசதியில்லை. அந்த வகையிலே தாலுக்காக்களிலுள்ள ஹெட் குவார்டர்ஸ் ஆஸ்பத்திரிகளுக்கும் தவிர, மற்றும் கிராமங்களிலுள்ள சிறு சிறு ஆஸ்பத்திரிகளுக்கும் தனிப்பட்ட முறையில் பட்ஜெட்டில் நிதி ஒதுக்கி வசதி செய்வது அவசியம். இதற்கான தக்க நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்றைய தினம் விவசாயத்தை எடுத்துக்கொண்டால், விவசாயத்திற்கு அரசாங்கம் அதிகமாக செலவழிக்கிறது என்று சொல்லப்படுகிறது. அப்படி செலவழிக்கும் தொகை மக்களுக்கு பயனுள்ள முறையில் செலவழிக்கப்படுகின்றதா என்று பார்க்க வேண்டும். விவசாயிகளுக்குத்தான் கடன் கொடுக்கப்படுகின்றதே என்று சொல்லப்படுகிறது. அவ்வாறு 1,000 ரூபாய் கடன் பெறுவதற்குள் 250 ரூபாய் செலவழிக்க வேண்டியிருக்கிறது. அதேபோல் இன்றைய தினம் கடன் கொடுக்கும் திட்டத்தைப் பார்த்தால் நான்கைந்து விதத்திலே கடன் கொடுக்கப்படுகின்றது. கூட்டுறவு ஸ்தாபனம் மூலம் கொடுக்கப்படுகிறது. சமுதாய அபிவிருத்தி இலாகா மூலம் கொடுக்கப்படுகிறது. இப்படியாக விவசாயிகளுக்கு நான்கைந்து

20th January 1961] [Sri K. N. Palaniswami Gounder]

விதங்களிலே கடன் கொடுக்கப்படுவதால், அவர்கள் தேவையான அளவுக்குமேல் கடன்பட்டு கஷ்டப்படுகிறார்கள். ஆகையால் இன்றையதினம் நகரங்களிலே பாங்குகளின் மூலம் அவரவர்களின் சொத்துக்களின் மதிப்பைப் பொறுத்து கடன் கொடுப்பது போல், கிராமங்களிலும் ரூரல் பாங்குகளின் மூலம் விவசாயிகளின் சொத்துக்களை மதிப்பிட்டு கடன் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவரவர்களின் சொத்துக்களை மதிப்பிட்டு அவரவர்களுக்கு இவ்வளவுதான் கடன் கொடுக்கலாம் என்பதை நிர்ணயிக்கவேண்டும். இதற்கான தக்க நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்கவேண்டும். அதேபோல் நான்கைந்து ஸ்தாபனங்கள் மூலம் விவசாயிகளுக்கு கடன் கொடுப்பதையும் தடுக்க வேண்டும்.

அடுத்து, இன்றையதினம் நம் ராஜ்யத்திலே சில அவசியமில்லாத இலாகாக்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று ஃபயர் சர்விஸ் டிபார்ட்மெண்டு. யுத்த காலத்திலே ஏதோ இந்த ஃபயர் சர்விஸ் டிபார்ட்மெண்டு இருந்தது. அது அப்படியே நிலைத்துவிட்டது. இது இப்போது தேவையில்லாத அளவுக்கு எல்லா இடங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. மற்ற ராஜ்யங்களை எடுத்துக்கொண்டால், பம்பாய், கல்கத்தா போன்ற தலைநகரங்களில் மட்டும்தான் இந்த பயர் சர்விஸ் டிபார்ட்மெண்டை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். நம் ராஜ்யத்தில் தேவையில்லாத இடங்களில் எல்லாம் இதை வைத்துக்கொண்டு, லட்சக்கணக்கான ரூபாய் அனாவசியமாக செலவழிக்கப்படுகிறது. லட்சக்கணக்கான மக்கள் வாழும் சென்னை, மதுரை, கோயம்புத்தூர் போன்ற இடங்களில் மட்டும் இந்த ஃபயர் சர்விசை வைத்துக்கொண்டால் போதுமானது என்று நினைக்கிறேன். திருப்பூரில் போலீஸ் பாதுகாப்புக்கு 40 பேரும், ஃபயர் சர்விசுக்கு 45 பேரும் அனாவசியமாக இருந்துகொண்டிருக்கிறார்கள். திருப்பூர் நகருக்கு மட்டும் வருஷத்திற்கு லட்ச ரூபாய்க்குமேல் செலவாகிறது. இங்கு வருஷத்திற்கு ஒரு தரம் அல்லது இரண்டு தரம் ஃபயர் ஆக்சிடெண்ட் ஏற்படுவதே கஷ்டம். இதற்கு இவ்வளவு பணம் செலவழிக்கப்பட வேண்டுமா? அதேபோல் ஃபயர் இன்சூரன்ஸ் தனிப்பட்ட கம்பெனிகளிடம் இருந்தது. அதையும் சர்க்கார் எடுத்துக்கொண்டது அனாவசியமானது. இப்படி இன்னும் பல டிபார்ட்மெண்டுகள் நம் அரசாங்கத்திலே இருக்கின்றது.

இன்றையதினம் சில உத்தியோகங்களை எடுத்துக்கொண்டால், உயர்ந்த உத்தியோகத்தில் இருக்கக்கூடிய சிலர் நான்கைந்து நிமஷங்கள்கூட வேலை செய்யாது இருக்கிறார்கள். இன்றைய தினம் தாலுகா ஆபீசை எடுத்துக்கொண்டால், 5 டிபுடி தாசில்தார்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தகுந்த வேலை அங்கு கிடையாது. அலேபோல் ஒரு ஜில்லாவை எடுத்துக்கொண்டால் இரண்டு கலெக்டர்கள், அவர்கள் உதவிக்கு 5, 6 பி. ஏ-க்கள். இப்படி அவசியமில்லாத பல இலாகாக்களில் சில உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டு இருக்கிறார்கள்.

[Sri K. N. Palaniswami Gounder] [20th January 1961

இதேபோல் பஞ்சாயத்திலும், சமுதாய அபிவிருத்தித் திட்ட இலாகாவிலும் கல்வி விஸ்தரிப்புக்கென்று இரண்டு பேர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இதேபோல் ஒவ்வொரு துறைக்கும் ஒருவர் விதம் 15 பேர்கள் நியமிக்கப்பட்டு இருக்கிறார்கள். ஒவ்வொரு கல்வி விஸ்தரிப்பாளருக்கும் ரூபாய் 150-க்குமேல் சம்பளம். இவர்கள் எல்லாம் முழு நேரமும் வேலை செய்கிறார்களா என்று பார்த்தால், ஒரு நாளைக்கு 5 நிமிடம் வேலை செய்வதே கஷ்டம். இதுபோன்று அவசியமில்லாத இன்னும் கிராம சேவக்குகள் போன்ற வேலைகள் இருக்கின்றன. இப்படி அவசியமில்லாத வேலையிலுள்ளவர்களை யெல்லாம் நீக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். மக்களுக்கு நல்ல காரியங்கள் செய்துகொடுக்கவேண்டிய இடங்களில் உத்தியோகஸ்தர்கள் வேண்டும். அவசியம் இல்லாத இடங்களில் உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆட்களுக்காக உத்யோகங்கள் ஏற்படுத்துவது என்பது கூடாது. அவசியம் இல்லாத இடங்களில் உள்ள உத்தியோகஸ்தர்களை நீக்கிவிட்டு, தேவையுள்ள இடங்களில் மாத்திரம் உத்தியோகஸ்தர்களை நியமிக்க வேண்டும்.

சில நகரசபைகளிலுள்ள மின்சார திட்டங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டது. 1948-ம் வருஷத்தில் திருப்பூரில் மின்சாரத் திட்டத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டார்கள். நான் அப்பொழுது நகரசபைத் தலைவராக இருந்தேன். சர்க்கார் உத்திரவிற்குப் பணியவேண்டுமென்ற முறையில் அப்பொழுது நாங்கள் அதை ஒத்துக்கொண்டோம். மதுரை, கோயம்புத்தூர் நகரசபைகளில் அரசாங்கம் மின்சாரத் திட்டத்தை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று உயர் நீதி மன்றத்தில் 'ஸூட்' போட்டார்கள். எடுத்துக்கொள்வதாயிருந்தால், எல்லா நகரசபைகளிலுள்ள மின்சாரத் திட்டங்களை சர்க்காரே எடுத்துக்கொள்ளவேண்டும். சில நகரசபைகள் சம்பந்தப்பட்டவரை சர்க்கார் மேற்கொண்டு மற்ற நகர சபைகளிலுள்ள திட்டங்களை மேற்கொள்ளாமல் இருக்கக்கூடாது.

நகரசபைகளுக்குப் போதிய நிதி வசதி இல்லாத காரணத்தினால் சர்க்காரே நகரசபைகளுக்குப் போதிய உதவி செய்து, ரோடு பராமரிப்பு, தண்ணீர் திட்டங்கள் இவைகளை துரிதமாக நடத்தும்படி செய்யவேண்டும். 1955-ல் 27 நகர சபைகளுக்குத் தண்ணீர் திட்டங்கள் போடப்பட்டிருந்தாலும், அவைகளையெல்லாம் விரைவில் நிறைவேற்றுவதற்கு அரசாங்கம் தக்க உதவி செய்து ஏற்பாடு செய்யவேண்டும். மக்கள் ஒவ்வொரு காரியத்திற்கும் சென்னைக்கு வரவேண்டியிருப்பதைத் தவிர்க்கவேண்டும். அதிகாரிகள் பரவலாக்கப்பட்டு ஜில்லா மாவட்டத்திலேயே மக்கள் எல்லா காரியங்களையும் செய்துகொள்ளும்படியான நிலைமையை ஏற்படுத்த வேண்டும். மக்கள் ஒவ்வொரு காரியத்திற்கும் சென்னை வருவதென்றால் அது மிகவும் தொல்லையாக இருக்கிறது. உதாரணமாக, சிறு தொழில்களுக்கு லைசென்ஸ் பெறுவது ஒரு பெரிய பிரச்னை.

20th January 1961] [Sri K. N. Palaniswami Gounder]

அம்மாதிரி லைசென்ஸ்கள் வழங்குவதற்கு கலெக்டர்களுக்கே அதிகாரம் வழங்கப்படவேண்டும். அதிகாரங்களை பரவலாக பகிர்ந்து கொடுக்கவேண்டும். ஒவ்வொரு காரியத்திற்கும் மக்கள் சென்னைக்கு வந்து குவியவேண்டிய நிர்ப்பந்தம் கூடாது.

ரயில்வே நிர்வாகம் மத்திய சர்க்காரிடம் இருந்தாலும்கூட, நான் இன்றையதினம் சொல்லிக்கொள்ள விரும்புவது என்னவென்றால், ரயில்களில் இடம் கிடைப்பதே இல்லை. திருப்பூருக்கும் கோவைக்கும் மத்தியில் 20, 25 ஆண்டுகளுக்கு முன்பு ஓடிக்கொண்டிருந்த ரயில்கள்தான் இப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கின்றன. சென்னை சர்க்கார் இதுவிஷயத்தில் தகுந்த சிபார்சு செய்து ரயில்களை அதிகமாக்கி மக்கள் போக்குவரத்திற்கு வேண்டிய வசதியை செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் எல்லோருக்கும் புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்திருப்பது நம் எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தருகிறது. நம்முடைய ராஜ்யத்தை, எல்லா ராஜ்யங்களுக்கும் வழிகாட்டக்கூடிய நிலையில் நிர்வாகம் செய்துவரக்கூடிய கனம் முதல் அமைச்சர் அவர்களுக்கும், ஏனைய அமைச்சர் அவர்களுக்கும், மற்ற கனம் அங்கத்தினர்களுக்கும் எனது உளம் கனிந்த நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri A. GOVINDASAMY :** கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையைப் படித்துப் பார்க்கும்பொழுது சிலவற்றை மறைத்தும், சிலவற்றை மிகைப்படுத்தியும் குறிப்பிட்டிருப்பதால், அந்த உரையை வரவேற்கக்கூடிய முறையில் இல்லாமல் இருக்கிறது என்பது வருத்தப்படக்கூடிய ஒரு செய்தியாகும். கவர்னர் அவர்களுடைய உரையில் நவம்பர் மாதத்திலும், டிசம்பர் மாதத்திலும் பெய்த அடைமழையின் காரணமாக ஓரளவு ரோடுகள், வீடுகள், நீர்த்தேக்கங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்று குறிப்பிட்டிருக்கிறது. பெரிய அளவு பாதகம் ஏற்பட்டிருப்பதை ஓரளவு என்று குறிப்பிட்டிருப்பதைத்தான், சிலவற்றை மறைத்தார்கள் என்று நான் குறிப்பிட்டேன். அதேநேரத்தில் தக்க நிவாரண வேலைகள் துவக்கப்பட்டிருக்கின்றன. மழையின் காரணமாக உற்பத்தியும் பெருகும் என்று சொல்லியிருப்பது மிகைப்படுத்திய விஷயம் என்று நான் இந்த நேரத்தில் தங்கள் மூலமாக அமைசர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மழையின் காரணமாக விவசாயிகளுக்குப் பெரிய நஷ்டம் ஏற்பட்டு, அவர்கள் பல தொல்லைகளுக்கு ஆளாக்கப்பட்டிருக்கிறார்கள். ஏழை, எளிய ஆதிதிராவிட மக்கள் தங்கள் குடிசைகளையும், கால்நடைகளையும் இழக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிற நேரத்தில், ஓரளவுதான் சேதம் என்று மறைத்துக்கூற வேண்டிய அவசியம் கிடையாது. பாதகம் ஏற்பட்டிருப்பதை உள்ளபடியே சொல்லி அதற்காக காலாகாலத்தில் எடுக்கப்பட்

[Sri A. Govindasamy] [20th January 1961

டிருக்கக்கூடிய நடவடிக்கைகளை குறிப்பிட்டிருந்தால், நான் அரசாங்கத்தைப் பாராட்டி இருக்கமுடியும். தக்க நிவாரண வேலைகள் துவக்கப்பட்டிருக்கின்றன என்று சொல்லப்பட்டிருந்த போதிலும், சென்னை நகரத்திலும், சென்னைக்கு அருகாமையிலும் பாதிக்கப்பட்ட சாலைகள் ஏராளமாக இருக்கின்றன. சாலையின் நடுவே உள்ள பாலங்கள் உடைப்பினால் சேதப்படுத்தப்பட்டிருக் கின்றன. அதன் காரணமாக பஸ் போக்குவரத்திற்கு தடை ஏற்பட்டிருக்கிறது. கடலூர்—விருத்தாசலம் மார்க்கத்தில் தம்பிப் பேட்டை என்ற இடத்திற்கு சமீபத்திலுள்ள பாலம் பழுதடைந் ததன் காரணமாக பஸ் விபத்து எற்பட்டு இரண்டு நபர்கள் இறந் தார்கள் என்ற செய்தியை பத்திரிகையின் மூலம் அறிந்திருக் கலாம். பல இடங்களில் பாலங்கள் ஆபத்தான நிலைமையில் இருக் கின்றன என்று 'காஷன் போர்டுகள்' மட்டும் போட்டுவிட்டு, அவற்றை செப்பனிடுவதற்கு தகுந்த நடவடிக்கை எடுக்காமல் அரசாங்கம் வாளாயிருக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டை இங்கே சொல்லாமல் இருக்க முடியவில்லை. அதேமாதிரி விழுப்புரம்— சென்னை மார்க்கத்தில் பஸ்கள் நேராகப் போகாமல், செஞ்சியை சுற்றி போகக்கூடிய நிலைமை இருந்தது. இப்பொழுது வீடூர் மார்க்கமாக பல கிராமங்களை சுற்றிக்கொண்டு பஸ்கள் போக வேண்டிய நிலைமை இருகிறக்து. பழுதடைந்த பாலங்களை செப்ப னிடுவதற்கு துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட வில்லை என்று குற்றச்சாட்டை சொல்லாமல் இருக்க முடியவில்லை. அதேபோலத் தான் குறிப்பாக ஆதிதிராவிட மக்களுக்கும் தகுந்த நிவாரண உதவி அளிக்கப்படவில்லை என்று சொல்ல வேண்டியிருக் கிறது. வெள்ளையர் காலத்தில் விலைவாசிகள் மலிவாக இருந்த போதுகூட வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட குடிசைவாழ் மக்களுக்கு ரூ. 30 நிவாரணம் அளிக்கப்பட்டது. விலைவாசிகள் ஏறியிருக்கிற இந்தக் காலத்திலும் உயர்த்திக்கொடுக்காமல் அதே ரூ. 30 தான் நிவாரணமாக அளிக்கப்படுகிறது. அந்த ரூ. 30-ம் எல்லா இடங்களிலும் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்றால் அதுவும் கிடையாது. சில இடங்களில் ரூ. 30 கொடுக்கப்பட்டிருக்கிறது. சில இடங்களில் ரூ. 20, சில இடங்களில் ரூ. 10 தான் கொடுக்கப் பட்டிருக்கிறது. சில இடங்களில் அதிகாரிகள் வந்து குறிப்பு மட்டும் எடுத்துக்கொண்டு போனபோதிலும், அந்த இடங்களில் நிவாரணம் அளிக்கப்படாமலே இருக்கிறது. இந்த நிலைமையை அரசாங்கம் கவனித்து தகுந்த நடவடிக்கைகளை துரிதமாக எடுக்க வேண்டும்.

கவர்னர் அவர்களுடைய உரையில், பிரதம மந்திரி நேரு அவர்கள் மழை அடித்து வெள்ளம் வந்த நேரத்தில் நிவாரண வேலைகளுக்காக பண உதவி அளித்ததற்கு அவருக்கு நன்றி தெரி வித்துள்ளார்கள். அவர் தொகை கொடுத்ததற்காக நானும் என்னுடைய பாராட்டுதலை தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால், அவர் கொடுத்துள்ள தொகையை கொஞ்சம் சிந்தித்துப் பார்த் தால், இந்த நெருக்கடியான நேரத்தில் அந்தத் தொகை மிகவும் குறைவுதான் என்று அபிப்பிராயப்பட வேண்டியிருக்கிறது. மொத்தம் ரூ. 25,000 கொடுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

20th January 1961] [Sri A. Govindasamy]

அதற்குமேல் கொடுத்திருந்தால் கனம் அமைச்சர் அவர்கள் சொல்லட்டும். தமிழ்நாடு வெள்ளத்தினுல் பாதிக்கப்பட்டிருக்கக் கூடிய இந்த நேரத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் இந்தத் தொகை போதாது. மத்திய அரசாங்கம் இன்னும் நிறைய உதவித் தொகை கொடுத்திருக்க வேண்டும். வடநாட்டில் பூகம்பம், பஞ்சம், வெள்ளம் வந்தபொழுது தமிழகத்திலிருந்து உதவி செய் திருக்கிறோம். நம்முடைய தமிழ்நாடு பாதிக்கப்பட்ட நேரத்தில் போதுமான உதவி தரப்படவில்லை என்ற குற்றச்சாட்டை சொல் லாமல் இருக்க முடியாது.

சில சமயங்களில் கோட்டையில் ஒரு அமைச்சர்கூட இல்லாமல் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள். ஆனால் வெள்ளம் அடித்த நேரத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளை அமைச்சர்கள் சென்று பார்வையிடவில்லை என்ற குற்றச்சாட்டை நான் சொல்லாமல் இருக்க முடியாது.

**The Hon. Sri P. KAKKAN :** கனம் அங்கத்தினர் அவர்கள் தெரியாமல் சொல்லுகிறார்கள் என்று நினைக்கிறேன். மழை பெய்து வெள்ளம் வந்த நேரத்தில், உடனடியாக எங்கெல்லாம் பாதிக்கப் பட்டிருந்ததோ அங்கெல்லாம் சென்று பார்வையிட்டு வந்திருக் கிறோம் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

**Sri A. GOVINDASAMY :** கனம் அமைச்சர் அவர்கள் போய் வந்ததற்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். பல அமைச் சர்கள் வெள்ளம் வடிந்ததற்கு பிற்பாடுதான் போனார்கள். வெள்ளம் வடிந்து போக்குவரத்துக்கு வசதி ஏற்பட்டபிறகு, ஜீப்பில் போகக்கூடிய வசதியெல்லாம் ஏற்பட்டபிறகுதான் சென்று பார்த்தார்கள். வெள்ளம் வந்து பாதிக்கப்பட்டிருக்கக் கூடிய நேரத்தில், குடிசைகள் தண்ணீரில் மூழ்கியிருந்த காலத் தில் அமைச்சர்கள் செல்லவில்லை என்றுதான் சொல்லுகிறேன். கனம் அமைச்சர் கக்கன் அவர்கள் இந்தக் காரியத்தை செய்ததை பற்றி நான் பாராட்டுகிறேன். ஆனால் கனம் ராமய்யா அவர்கள் காலம் கடந்துதான் வந்தார்கள்.

**Srimathi T. N. ANANDANAYAKI :** On a point of order, Sir, the statement of the hon. Member is not correct. It was only the Hon. the Chief Minister who went out of the City first to visit the affected areas and not the hon. Member.

**Mr. SPEAKER :** It cannot be a point of order.

**Sri A. GOVINDASAMY :** வெள்ளம் வந்த நேரத்தில் சென்னை யில் உள்ள பல கலைஞர்கள், புரட்சி நடிகர் ராமசந்திரன், லட்சிய நடிகர் ராஜேந்திரன், சிவாஜி கணேசன் ஆகியோர்கள் ஏழை எளியவர்களுக்கு உதவிசெய்ய முன்வந்தார்கள். உணவுப் பொட்டலங்களை சேரி சேரியாக கொண்டுபோய் கொடுத்தார்கள். அவர்களுடைய சேவையை பாராட்டியிருக்கவேண்டும். ஆனால் அவர்களை பாராட்ட கவர்னர் அவர்கள் தவறியிருக்கிறார்கள்.

இந்தப் பாராட்டுதல்களின் மூலம் அவர்களை உற்சாகப்படுத்தி, மேலும் தொண்டு செய்வதற்கு ஊக்குவிக்க முடியும். அதைச் செய்யத் தவறி விட்டார்கள். கட்சிக் கண்ணோட்டத்தோடு, நமது முதலமைச்சர் அவர்கள், சிவாஜி கணேசன் அவர்கள் வீட்டிற்கு மட்டும் போய், அவரைப் பாராட்டி வந்ததாக ஒரு செய்தியைப் பார்த்தேன்.

**MR. SPEAKER** : இது எல்லாம் "பிரைவேட்" விஷயம். சபையில் சொல்லி என்ன பிரயோஜனம். முதல் அமைச்சர் அவர்கள் இந்த வீட்டுக்குப் போனார், அந்த வீட்டுக்குப் போனார் என்று சொன்னால், அதில் இச்சபைக்கு என்ன அக்கறை இருக்கிறது? (சிரிப்பு.) கவர்னர் அவர்கள் உரையைப் பற்றித்தான் இங்கு பேசலாம்.

**SRI A. GOVINDASAMY** : உதவி செய்தவர்களை எல்லாம் பாராட்டி இருந்தார்கள். ஆகவே, இவர்களையும் பாராட்ட வேண்டுமென்றுதான் சொன்னேன்.

**MR. SPEAKER**: நான்கூடத்தான் உதவி செய்திருக்கிறேன். என் பெயர் இல்லை .(சிரிப்பு.)

**SRI A. GOVINDASAMY** : கவர்னர் அவர்கள் பாராட்டாமல் இருந்தாலும், நான் உண்மையிலேயே உங்களுடைய சேவையைப் பாராட்டுகிறேன். இன்றையதினம் விலைவாசிகள் இறங்கிவிட்டதாக கவர்னர் அவர்கள் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பிய நமது நிதி அமைச்சர் அவர்கள், நம்முடைய மாநிலத்திலே விலைவாசிகள் எப்படி இருக்கின்றன என்று பார்ப்பதற்காக, சென்னை நகரில் உள்ள விறகுக் கடைக்குப் போய்வந்ததாக செய்தியைப் பார்த்தேன். அவர்கள் சொந்த அனுபவமே அவர்களுக்கு வழிகாட்டியாக இருந்திருக்கும். அரசாங்கம் தயாரித்திருக்கும் புள்ளி விவரங்களைப் பார்த்தாலே, அக்டோபர் மாதத்தில் ரூ. 56 ஆக இருந்தது, நவம்பர் மாதத்தில் 67 ரூபாயாகவும், டிசம்பர் மாதத்தில் 89 ரூபாயாகவும் ஏறிக்கொண்டே போயிருக்கிறது. இதைத் தடுக்க நம்முடைய அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்தது? விறகு கிடைக்காத காரணத்தால், ஏழை எளியவர்கள் சமையல் செய்வதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். விலைவாசிகளை ஏற்றிய கடைக்காரர்கள் மீது நமது நிதி அமைச்சர் அவர்கள் என்ன நடவடிக்கை எடுத்தார்கள்? விலைவாசிகளைக் கட்டுப்படுத்த அமைச்சர்கள் என்ன வழி சொல்லுகிறார்கள் என்று பார்ப்போம். "மக்களிடம் வாங்கும் சக்தி அதிகரித்திருக்கிறது, ஆகையால் விலைவாசிகள் ஏறினால் அதில் தவறு இல்லை" என்று கனம் அமைச்சர் வெங்கட்டராமன் பேசுகிறார்கள். "ஜனத்தொகை அதிகமாகி விட்டது, அதனாலே விலைவாசி ஏறியிருக்கிறது" என்று விவசாய அமைச்சர் சொல்லுகிறார். "திட்டம் போடப் போட விலைவாசிகள் ஏறத்தான் செய்யும்" என்று கனம் நிதி அமைச்சர் சொல்லுகிறார்கள். விலைவாசியைக் கட்டுப்படுத்தி, ஏழை

20th January 1961] [Sri A. Govindasamy]

எளியவர்களுக்கு மலிவான விலையில் முக்கியமான பொருள்கள் கிடைப்பதற்கு நமது அரசாங்கம் வழிவகை செய்யவில்லை என்று சொல்லுகிறேன்.

விவசாய விதைப் பண்ணைகளுக்காக ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சர்க்கார் விதைப் பண்ணைகளால் ஏற்கனவே அடைந்துள்ள நஷ்டத்தை நமது விவசாய அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நீர்ப்பாசன வசதியில்லாத நிலங்களை, வேண்டியவர்கள் நிலங்களை எல்லாம் அதிக விலைக்கு எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். நல்ல விதைகள் கிடைக்கவில்லை. அரசாங்கத்திற்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பண்ணைகளுக்கு மின்சார வசதி கிடையாது. அங்கே பணியாற்றும் ஆட்களுக்கு பண வசதி கிடையாது. சர்க்கார் விதைப்பண்ணைகள் சம்பந்தமாக எஸ்டிமேட்ஸ் கமிட்டி சிபார்சுகள் செய்திருக்கின்றன. அந்த சிபார்சுகளை எல்லாம் நிறைவேற்றக்கூட அரசாங்கம் முயற்சி எடுக்கவில்லை.

அண்ணு அவர்கள் ஆயிரம் கோடி ரூபாய் கேட்ட நேரத்தில், "பண்டாரம்" என்று கிண்டல் செய்தார்கள். அண்மையில் வேலூரில் நமது நிதி அமைச்சர் அவர்கள், ஆளும் கட்சிக்கு எல்லாம் உபதேசம் செய்வதைப் போல, எதிர்க் கட்சிக்கும் உபதேசம் செய்திருக்கிறார்கள். பண்பாட்டுடன் பேசவேண்டும் என்று அவர்கள் பேசின பேச்சும், அவர்களைத் தூண்டிவிட்ட முதல் அமைச்சர் அவர்களின் பேச்சும் பத்திரிகையில் வெளியாகியிருந்தது. மற்றவர்களுக்குத்தான் இந்த உபதேசம், தனக்கு இல்லை என்பதைத் பார்க்கும்போது வேதனைப்பட வேண்டியிருக்கிறது. தானே வழிகாட்டியாக நடந்துகொண்டால், அவர்களைப் பாராட்டியிருக்க முடியும். வழி தவறிப் பேசியிருக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டை நான் தெரிவிக்கிறேன். அதேசமயத்தில், டாக்டர் லோகநாதன் அவர்கள் 15 ஆண்டு காலத்திற்கு, அதாவது மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு 2,000 கோடி ரூபாய் வேண்டுமென்று சொன்னார்கள். அந்த அளவுக்காவது மத்திய அரசாங்கத்திடமிருந்து பண உதவி கேட்க நமது அரசாங்கத்திற்கு துணிவு இருந்ததா? நமது அமைச்சர் அவர்களுக்கு துணிவு இல்லையென்ற குற்றச்சாட்டைத் தெரிவித்துக்கொள்கிறேன். எல்லாக் கட்சிகளும் சேர்ந்து ரூபாய் 390 கோடி செலவிடப்படவேண்டுமென்று தயாரித்த திட்டம் என்னவாயிற்று? 291 கோடி ரூபாயாக அது ஏன் குறைக்கப்பட்டது? அதற்கான காரணங்கள் சொல்லப்படவில்லை.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தூத்துக்குடித் திட்டம் சேர்க்கப்பட்டுள்ளது என்ற மகிழ்ச்சியான செய்தியை வரவேற்கிறோம். இத்திட்டத்தைப் பொறுத்தவரையில்கூட பூர்வாங்க வேலை இன்னும் துவங்கப்படவில்லை. அதற்காக நியமிக்கப்பட்ட காரியதரிசி, திட்டம் சேர்க்கப்பட்டதும் வேலை துவங்கப்படுமென்று சொல்லியிருக்கிறார்.

[Sri A. Govindasamy] [20th January 1961

நெய்வேலித் திட்டத்தைப் பற்றி பிரமாதமாகப் பேசப்படு கிறது. என்னுடைய மவாட்டத்தில் இருப்பதால், இதைப்பற்றி எனக்குத் தெரியும். இந்தத் திட்டம் ஆமை வேகத்தில்தான் நடந்து வருகிறது. ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலச் சொந்தக்காரர் களுக்கு அளிக்கப்பட்ட நஷ்ட ஈடு குறைவு என்று ஹைகோர்ட் தீர்ப்பளித்திருக்கிறது. அதன்பேரில் சுப்ரீம் கோர்ட்டுக்கு மனுப் போட்டிருக்கிறார்களே தவிர, பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு நஷ்ட ஈடு கொடுக்க முன்வரவில்லை. நெய்வேலித் திட்டம் வெற்றி கரமாக ஆவதற்கு அங்கேயுள்ள தொழிலாளிகள் பாடுபட்டு வரு கிறார்கள். தினக் கூலிக்குத்தான் அவர்களை வேலைக்கு வைத்திருக் கிறார்களே தவிர, அவர்களுக்கு மாதச் சம்பளம் கொடுப்பதற்கு வழிவகை செய்யப்படவில்லை. அங்கே அமைக்கவிருக்கும் உரத் தொழிற்சாலை சம்பந்தமாக பூர்வாங்க வேலைகள் இன்னும் எடுக்கப் படவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அங்கு எப்பொழுது போயிருந்தார் என்பதை அறிய விரும்புகிறேன்.

SRI A. GOVINDASAMY : இரண்டு மாதங்களுக்கு முன்பு போயிருந்தேன். ஆமை வேகத்தில்தான் அங்கு வேலை நடை பெறுகிறது. மூன்றாவது திட்டகாலத்தில் எல்லா கிராமங் களுக்கும் மின்சார வசதி கொடுக்க முடியும் என்று எதிர்பார்க்கப் படுவதாக கவர்னர் உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. செய்து கொடுப்போம் என்ற உறுதிமொழி இல்லை. ஒரு கிராமத்திற்கு 25 பம்பு செட்டுகள் கொடுத்தால் கிராமத்தின் தேவை பூர்த்தியாகி விட்டதாக மின்சார போர்டு கருதுகிறது. பம்பு செட்டுகள் போட்டால் நிலத்திற்குக் கெடுதி என்று நினைத்துக் கொண்டிருந் தவர்கள் எல்லாம், இப்பொழுது ஒவ்வொரு கிராமத்திற்கும் கூடுதலான பம்பு செட்டுகள் வேண்டுமென்று கேட்கிறார்கள். அவர்கள் கோரிக்கையையும் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய நட வடிக்கைகள் எடுக்கவேண்டும்.

என்னுடைய தொகுதியில் ஒரு கிராமத்திற்கு மின்சாரத் திட்டம் ஸாங்ஷன் ஆகி இருந்தது. வாக்கூர், பகண்டை, மாத்தூர் வழியாக குமளத்திற்கு ஒரு ஸ்கீம் சாங்ஷன் செய்யப் பட்டது. ஒரு அமைச்சர் பக்கத்து கிராமத்திற்கு வந்துபோன பிறகு, அரசியல் கண்ணோட்டத்தோடு, அதே குமளம் கிராமத் திற்கு கங்கராம்பாளையம் வழியாக திருப்பப்பட்டது. நீண்ட நாளாக அந்த கிராமங்களிலுள்ள மக்கள் மின்சார இணைப்பு வரும் என்று எதிர்ப்பார்த்தார்கள். நான் சொல்லுவது சரியா இல்லையா என்பதைப் பரிசிலித்து பதில் சொல்லட்டும்.

சிறிய பாசனத் திட்டங்களுக்காக 8 கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். நந்தன் கால் வாய்த் திட்டத்தை விஸ்தரிக்கவேண்டும், அதனால் பல கிராமங் களுக்கு நன்மை எற்படும் என்று சொல்லியிருக்கிறேன். கனம் மராமத்து அமைச்சர் அவர்களும், கனம் முதலமைச்சர் அவர்

20th January 1961] [Sri A. Govindasamy]

களும் பார்த்திருக்கிறார்கள். பல வாய்க்கால்கள் தூர்ந்து போய் இருக்கின்றன. அவற்றை மராமத்து செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவில்லை. விவசாயிகளுக்குப் போதுமான வசதிகள் செய்து கொடுத்து விட்டோம் என்று சொல்கிறார்கள். ஆனால், சிதம்பரம் தாலூக்காவில், புவனகிரி ப்ளாக்கிலே, அலமேலுமங்காபுரம், வலங்கிப்பட்டி, பெரிய தும்மட்டி, சிறிய தும்மட்டி, தச்சக்காடு முதலிய கிராமத்திலுள்ள விவசாயிகள் கஷ்டம் தீரவில்லை. அவர்கள் அமைச்சரவர்களைப் பார்க்க வேண்டும் என்று, அவர்கள் தங்கியிருந்த விடுதியில் சென்று கேட்டும்கூட, அமைச்சரவர்கள் அங்கெல்லாம் போகவில்லை. 11-30 a.m.

உர விநியோகத்தைப்பற்றியும் ஒரு சில வார்த்தைகள். நமக்குத் தேவையான உரத்தை நல்ல முறையிலே வழங்க மத்திய சர்க்கார் முன்வரவில்லை. நம் மாநில அமைச்சர்களும், அவர்களிடம் கண்டித்துக் கேட்க பயப்படுகிறார்கள். வற்புறுத்திச் சொல்ல இவர்களுக்குத் தைரியம் இல்லை என்ற குற்றச் சாட்டை சொல்ல வேண்டியிருக்கிறது. நியாயமான விலையில் கிடைப்பதற்குப் பதிலாக, ரூ. 35 க்குக் கிடைப்பதற்குப் பதிலாக, மூட்டை ஒன்றுக்கு ரூ. 60, 70 என்று கொடுக்க வேண்டியிருக்கிறது. சாப்பாட்டு உப்பை அதில் கலந்து விற்று விடுகிறார்கள். "எவ்வளவோ பொருள்களில் கலப்படம் இருக்கிறது ; அம்மாதிரி இதிலும் இருந்து விட்டுப் போகட்டுமே" என்ற முறையில் அமைச்சரவர்கள் சொல்கிறார்கள். இன்று காலையில், பதில் சொல்லும் போதுகூட உணவு அமைச்சர் எல்லாவற்றிலும் தான் கலப்படம் இருக்கிறது, இதிலுந்தான் இருந்து விட்டுப் போகட்டுமே என்று சொல்வதிலிருந்து, அப்படிக் கலப்படம் செய்கிறவர்கள் தெம்பாக இருக்கிறார்களே தவிர, அதைத் தவிர்க்க வேண்டும் என்ற உத்திரவாதம் கொடுக்கத் தயங்குகிறார்கள்.

ஒரு ப்ளாக்கில் 4, 5 சொஸைடிகள் மூலம் விநியோகிப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால், எல்லா கிராமங்களுக்கும் கிடைக்கும் நிலைமை இல்லை. ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கும் சொஸைடியும் விநியோகித்தால்தான் எல்லா கிராம மக்களுக்கு உரம் கிடைக்க உதவியாக இருக்கும். இப்பொழுது உரத்திற்கு அதிகக் கிராக்கி வந்திருக்கிறது. ஏற்கெனவே கடன் வேண்டுமானால் உரமாக கொடுக்கப்பட்டது. இப்பொழுதும், கடனாகவோ அல்லது மற்ற வழியிலோ உரம் வேண்டிய அளவு விநியோகிக்க ஆவன செய்யவேண்டும்.

சிதம்பரம் தாலூகாவில் கனம் ராமையா அவர்கள் சுற்றுப் பிராயணம் செய்தார்கள். அப்பொழுது அவர்களிடமும் சொல்லப்பட்டது. அங்கே, கண்டமங்கலம், நாட்டுமங்கலம் முதலிய கிராமங்கள், அந்த கிராமத்து மக்கள் அதிகம் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த கிராம மக்களுக்குப் போதுமான உதவிகள் செய்து தரப்படவில்லை. தேவையான உரம் கொடுக்கப்படவில்லை ; ஓடைகளும் சீர்திருத்தப்படவில்லை.

[Sri A. Govindasamy] [20th January 1961

அணு மின்சார உலை ஏற்படுத்துவது பற்றி தீர்மானமாக ஒன்றும் தெரிவிக்கவில்லை. பம்பாயில் ஏற்படுத்தியது போல், மத்திய சர்க்காரை வற்புறுத்தி ஏன் நம் மாகாணத்தில் ஏற்படுத்த தயக்கம் காட்டுகிறுர்கள். உருக்கு உலை வரும் என்று சொல்லியிருக்கிறுர்கள். உண்மையிலேயே அது பாராட்டப்படவேண்டிய விஷயம். அது நெய்வேலியில் இருக்கும் என்று முதல் அமைச்சரவர்கள் சொல்லியிருக்கிறுர்கள். (கனம் ஸ்ரீ. சி. சுப்பிரமணியம்: இன்னும் தீர்மானமாகவில்லை.) முடிவு எடுக்கவில்லை என்று சொல்லுகிறுர்கள். அது நிபுணர்கள் செய்ய வேண்டிய விஷயம் என்று சொல்லுகிறுர்கள். அது நெய்வேலியில் வந்தாலும் சரி, சேலத்தில் வந்தாலும் சரி, அது உடனடியாக இந்த மாநிலத்தில் நிறுவ வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நெய்வேலி திட்டம் பற்றிப் பேசும்போது, கடலூர் துறைமுகத்தை, ஆழ்கடல் துறைமுகமாக விஸ்தரித்தால் நல்லது; அதைப் பரிசிலனை செய்து கைவிட்டிருக்கிறுர்கள் என்று தெரிகிறது. அதை எடுத்துச் செய்ய தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri V. SUBBIAH**: கனம் சபாநாயகர் அவர்களே, இன்று கனம் கவர்னர் பெருமான் உரையின் மீது பேசும்போது, பல முக்கியமான விஷயங்களை கவர்னர் பெருமான் தங்கள் உரையில் விட்டு விட்டார்கள் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. முக்கியமாக, விவசாயத்திற்கு அடுத்தபடியாக கவனிக்கப்படவேண்டியது கைத்தறி, கைத்தறி போர்டைச் சேர்ந்த ஸ்ரீ சோமப்பா அவர்களும், அகதிகளுக்கு அடுத்தபடியாகக் கவனிக்கப்படவேண்டியவர்கள் கைத்தறியாளர்கள் என்று குறிப்பிட்டு இருக்கிறுர்கள். அப்பேர்ப்பட்ட பெரும் தொழில் இன்று பாதிக்கப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி கவர்னர் பெருமான் தன் உரையிலே எந்தவிதமான அறிவிப்பும் இல்லை என்பதையும் சிந்தனை பண்ணவும் கஷ்டமாக இருக்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது. போக்கு வரத்துத் துறையிலும், தூத்துக்குடி துறைமுகம் வருவது வரவேற்கத்தக்கது என்ருலும், அதைச் சேர்ந்த மிக முக்கியமான சேது சமுத்திரத் திட்டம் பற்றி கவர்னர் பெருமான் தன் உரையில் குறிப்பிடாமல் இருப்பது, வருந்த வேண்டிய விஷயம் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

விவசாயத்துறையில்கூட என்ன? ரூ. 80 கோடி என்று போட்டிருக்கிறுர்கள் இந்த திட்டத்திலே. அந்தப் பணத்தில் மக்களுக்கு எந்த அளவுக்கு உண்மையாகப் பயன் ஏற்படுகிறது எறை பார்த்தால், செலவழித்த ரூபாயின் ஒரு சிறு பங்குதான் மக்களுக்குப் போய்ச் சேருகிறது என்பதைக்கான வருத்தமாக இருக்கிறது. இந்த இரண்டு திட்டங்களிலும் பார்த்திருக்கிறேம். மதிப்பிற்குரிய அங்கத்தினரவர்கள் சொன்னது போல, விவசாயிகளுக்கு ஏதாவது ரசாயண உரம் வேண்டுமென்ருல், வேண்டிய அளவு கண்ட்ரோலில் கிடைப்பதில்லை;

ரூ. 55-க்கு விற்க வேண்டிய மூட்டை உரத்தை, இன்றைக்கு ரூ. 82 என்று கொடுத்து வாங்க வேண்டிய நிலைமைதான் இருக்கிறது. இப்படியிருந்தால் விவசாயப் பொருள்கள் உற்பத்தியாவது எப்படி, அதன் தரம்தான் எப்படி உயர முடியும்? பல்வேறு விவசாயக் கோட்டாக்களையும் வாங்குகிறவர்கள் ரூ. 400, 500 என்று மாற்றி, விவசாயிகளுக்குப் பயன் இல்லாமல் செய்து விடுகிறார்கள். ஆகவே, விவசாயத்திற்காக என்று ஒதுக்கியிருக்கும் பணம் விவசாயிகளுக்குப் பூராவாகப் போய்ச் சேருவதில்லை. இடையில் உள்ளவர்கள்தான் லாபம் அடைகிறார்கள். ஆகவே இப்படிப் பல கோடி ரூபாய்களை ஒதுக்கினால் மட்டும் பிரயோசனம் இல்லை என்பதை நேரிடை அனுபவத்தினால் நாம் காண முடிகிறது.

மின்சாரம் பற்றிப் பேசும்போது, வருத்தத்துடன் சொல்லுகிறேன், இந்த மன்றத்திலே திரும்பத் திரும்பச் சொன்ன விஷயத்தை. குந்தா போன்ற பெரிய திட்டங்கள் வந்தாலும்கூட, தொழில் துறையில் இருப்பவர்களைத் தவிர, விவசாயி அனுபவிக்கும் மின்சார வெட்டு, க்ரூப் சிஸ்டம், இவைகள் மிகப் பெரிய குறைகள்; இதைவிடப் பெரிய கஷ்டமும் நஷ்டமும் விவசாயிக்கு இருக்க முடியாது. மேலும், தொழில் துறையில் இருப்பவர்கள் ஆயிரம் யூனிட்டுக்கு அரையணா விதம் கட்டுகிறார்கள்; ஆனால், விவசாயத்திற்கோ, ஒன்பது பைசா என்கிறோம், ஆனால் அது உண்மையில் 11 அல்லது 14 பைசா அளவுக்கு வந்து விடுகிறது, மினிமம் சார்ஜ், மீட்டர் சார்ஜ் இன்னும் என்ன என்னவோ சார்ஜ் கணக்கில்லாமல். எந்த அளவில் கொடுத்தாலும், ஆன்யுவல் மினிமம் சார்ஜ் இருக்கிறது. சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டது போல், விவசாயி லயன்கள் கேட்டால், அவன் பல காலம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. ஆனால், ஒரு மில் முதலாளியோ, அல்லது ஒரு ஸ்பின்னிங் மில்லுக்கோ, வீவிங் மில்லுக்கோ என்று கேட்டால், மில் கட்டடம் கட்டி, அங்கு இயந்திரங்கள் எரெக்ட் செய்வதற்கு முன்னாலேயே, போஸ்டுகள் வந்து விடுகின்றன. விவசாயத் துறையில் என்றால் கால தாமதம் தான் ஆகிறது. அதைப் பார்க்க வருத்தமாக இருக்கிறது. அந்த நிலைமை இந்த நாட்டில் இருக்கக்கூடாது. அப்படியிருக்கும் நிலையில் விவசாயிகள் எப்படி உற்பத்தியைப் பெருக்க முடியும்?

அடுத்தபடியாக, விவசாயிகள் உற்பத்தி செய்யும் 'மனி க்ராப்ஸ்' என்று சொல்லக்கூடிய வெங்காயம், மிளகாய் வத்தல், புகையிலை, கரும்பு இவைகளை ஏற்றுமதி செய்வதற்கான லைசென்ஸ் விவசாயிகளைக்கொண்ட கூட்டுறவு ஸ்தாபனங்களுக்குக் கொடுக்காமல் தனிப்பட்டவர்களுக்குக் கொடுப்பதினால் விவசாயிகள் நேரடியாக லாபத்தை அனுபவிக்க முடியாமல் போகிறது. கவர்னருடைய உரையில், விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்குப் பாதுகாப்பு, விலை நிர்ணயம் இவைகள் குறிப்பிடப்படவில்லை. இது மிகவும் வருந்தத்தக்கது.

[Sri V. Subbiah] [20th January 1961

அணைக்கட்டுத் திட்டங்களை எடுத்துக்கொண்டால், கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய ஜில்லாவில் பெரிய திட்டங்கள் முடிந்துவிட்டன. எங்கள் ஜில்லாவிற்கு உதவக்கூடிய திட்டங் களைப்பற்றி, ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் இந்த நாட்டில் ஜஸ்டிஸ் கட்சி பொறுப்பில் இருந்த காலத்திலேகூட, கிரியார், பம்பையார் திட்டம் இருப்பதாகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலையிலே ஓடிக்கொண்டிருக்கிற அந்த நதி களின் குறுக்கே அணை கட்டவேண்டும் என்பதைக் குறித்து எத்தனையோ இன்ஜினீயர்கள் பார்த்துப் பார்த்து அவை கைவிடப் பட்டுக்கொண்டே வருகின்றன. மூன்றாவது திட்டத்தில்கூட அவை இடம் பெறுமா என்று தெரியவில்லை. இந்த நிலையை நிதி அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும். பெரிய திட்டங்களைப் பொறுத்தவரையில் கோயம்புத்தூர் ஜில்லாவுக்கு மிக முக்கியத் துவம் கொடுத்துவிட்டார்கள் அவர்கள். அதைப்போல, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய வரண்ட பிரதேசங்களிலும் அவர்களுக்கு அந்தக் கண்ணோட்டம் இருக்கவேண்டும். அவர்கள் அதில் கொஞ்சம் அக்கறை காட்டி எதிர்காலத்திலே வரும் திட்டங் களிலாவது அவைகளைச் சேர்த்து, நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். எங்கள் பகுதியில் இருக்கும் மக்கள் தலைமுறை தலை முறையாக வரண்ட பிரதேசத்தில் வாழ்கின்றார்கள். மழை பெய் தால் வாழ்க்கை; இல்லையென்றால் வாழ்க்கையில்லை யென்ற நிலை இருக்கிறது. மழை பெய்து என்ன ஆயிற்று? மழை எங்களுடைய பிரதேசத்தில் அளவோடு பெய்தால்தான் எங்களுக்கு விளைச்சல் உண்டு. அதிக மழை காரணமாக சம்பம்புல் என்ற மகசூல் அடி யோடு போய்விட்டது. எக்காவுக்கு ஐந்து கோட்டை விளை வாகிக் கொண்டிருந்தது, இப்பொழுது ஒரு கலம் விளையுமா என்று நிச்சயமாகச் சொல்ல முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு விளைச்சல் குறைந்துவிட்டது. பருத்தியைப்பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. இந்த நாட்டிலே உயர்ந்த ரகப் பருத்தியாகிய கருங்கண்ணிப் பருத்தி அங்கே உற்பத்தியாகிறது. இந்த வருஷத்திலே பெய்த மழையினால் பருத்திச் செடியும் களையும் ஒன்றாக வந்து, எக்கா ஒன்றுக்கு ரூ. 300 வரையில் செலவழித் திருக்கிறோம்—என்றால், அவர்களுடைய நிலையை என்னவென்று சொல்வது? சமீபத்தில் பெய்த பெரு மழையினால் எல்லா இடங் களும் வெள்ளக் காடாகிவிட்டதால், ஒரு புஞ்சையில் இருக்கும் மண் இன்னொரு புஞ்சைக்குக் கொண்டுபோகப்பட்டு விட்டது. கிராமப் பாதைகளும் சேதப்பட்டு, சமீபத்தில் சீர்திருத்த முடி யாத நிலையில் இருக்கின்றன. இம்மாதிரி பல கஷ்டங்களை கிராமங் களில் உள்ள விவசாயிகள் அடைகிறார்கள்.

கால்நடைகளைப்பற்றி கவர்னர் அவர்கள் உரையில் ஒன்றும் குறிப்பிடாமல் விட்டு விட்டார்கள். கால்நடை இன்ஷ்யூரன்ஸ் திட்டம் ஏற்படுத்தவேண்டும். கால்நடைகளுக்கு அடிக்கடி நோய் வந்து நஷ்டம் ஏற்படுகிறது. ஒரு ஜோடி மாடு ஆயிரம் ரூபாய் இல்லாமல் வாங்க முடியாது. ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிய மாடுகள் ஒரு மணி, அரை மணி நேரத்திலே நோயினால் சாகின்றன என்றால், இந்த அரசாங்கம் அவைகளைக் காப்பாற்ற முடியவில்லை.

இந்த நிலையில் விவசாயி எப்படி விவசாயம் செய்ய முடியும்? அவன் எவ்வளவு நஷ்டம் அடைகிறான் என்பதைச் சிந்திக்க வேண்டும். மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்யா குமரி ஆகிய ஜில்லாக்களுக்கு கேந்திரமாக விளங்கும் மதுரைமா நகரத்தில் சென்னை வேப்பேரியில் உள்ள வெட்டரினரி ஆஸ்பத் திரி போன்று ஒன்று இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அந்தப் பகுதியில் உள்ள கால்நடைகளைக் காப்பாற்ற முடியும்.

சர்வகலாசாலை எங்கள் பகுதிக்கு வருகிறது என்ற சந்தோஷத் தோடு இருக்கின்றோம். அதை அரசாங்கம் முக்கியமாக மதுரை நகரத்திற்குத்தான் கொடுக்கவேண்டும். எங்கள் பகுதியில் வசதி யற்ற நிலைமையில் இருக்கின்றோம். அந்த வசதிகளையெல்லாம் உண்டாக்கவேண்டும். அத்துடன், மதுரையில் ஒரு சர்வகலா சாலை வைக்கவேண்டுமென்றுக் கேட்டுக்கொள்கின்றேன்.

(Deputy Speaker in the Chair)

கவர்னர் பெருமான் மிக முக்கியமாக உள்ள பல திட்டங்களைக் குறிப்பிடவில்லை. தூத்துக்குடித் துறைமுகத் திட்டம் ஏதோ வரு கிறது என்று சொல்லியிருக்கிறார். அந்த அளவுக்கு அதிருஷ்டம் என்று தான் சொல்லவேண்டும். திருநெல்வேலி முப்பது மைல் தூரத்தில் இருக்கிறது. இம்மாதிரி நகரங்களில் பெரிய தொழிற் சாலைகள் வேண்டும். கச்சாப் பொருள்கள் எங்கெங்கே கிடைக் கின்றனவோ, அங்கே தான் தொழிற்சாலைகளை ஆரம்பிக்க வேண்டுமே தவிர பாவலாக ஆரம்பிக்கின்றோம் என்ற எண்ணத் தில் எங்கெங்கேயோ ஆரம்பிக்கிறார்கள். சேலத்தில் இரும்பு கிடைக்கிறதென்றால், அதை விட்டுவிட்டு திருநெல்வேலியில் இரும்புத் தொழிற்சாலை வைக்க முடியுமா? முடியாது. அது மாதிரி, எங்கள் பகுதியில் நீண்ட இழைப் பருத்தி கிடைக்கின்றது. அந்த இடத்தில்தான் ஸ்பின்னிங் மில்ஸ் இருக்க வேண்டும். அங்கே இருந்தால்தான் உற்பத்தி ஆகக்கூடிய பொருள் நல்லமுறையிலே அந்த விவசாயிகளுக்குக் கிடைக்கும். அப்படியில்லாமல் 100 மைல்களுக்கு அப்பால் வைக்கின்றோம் என்றால், அதில் பயன் இல்லை. கூட்டுறவு மில்கள் எல்லாம் எங்கள் பகுதிக்குக் கொடுக்கவேண்டும். சாத்தூர் போன்ற இடங்களில் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். விவசாயக் கூலிகளுக்கு வேலை இல்லாத நிலைமை இருக்கிறது. இதையெல்லாம் நீக்க அரசாங்கம் உடனடியாகத் திட்டமிட்டு வேலை செய்யவேண்டும். கவர்னர் பெருமான் உரையிலே முக்கிய மான பல அம்சங்கள் குறிப்பிடப்படாததற்கு என்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

**SRI J. MATHA GOWDER:** கனம் உதவி சபாநாயகர் அவர் களே, இந்த ஆண்டு தொடர் கூட்டத்திலே கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்தியிருக்கும் உரையை முழு மனதோடு ஆதரித்து என்னுடைய கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த

[Sri J. Matha Gowder] [20th January 1961

மாநிலம் எவ்வளவு சாதிக்கவேண்டுமென்று சொன்னதோ அதை விட உயர்வாகச் சாதிப்பதற்கு முடியும் என்ற தோரணையில் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். எந்தத் துறையில் எடுத்தாலும், சர்க்கார் போட்ட திட்டத்தைவிட அதிகமாக திட்டத்தை நிறைவேற்றக்கூடிய வாய்ப்பு இருக்கிறது, என்று அவர் சொல்வது எதைக் குறிக்கிறது என்றால், நம்முடைய அமைச்சரவையின் சாமார்த்தியத்தைக் காண்பிக்கிறது. நம்முடைய அமைச்சரவைக்கு, சொல்லாமலே வேலை செய்யக்கூடிய திறன் இருக்கிறது. வெளியிலே நாங்கள் செய்கிறோம் என்று பெருமை அடித்துக்கொள்ளாமல், செய்யக்கூடிய காரியத்தை அவர்கள் நமக்குச் சொல்வதற்குப் பதிலாக சொல்லாமலேயே எவ்வளவோ காரியங்களை அதிகமாகச் செய்திருக்கிறார்கள் என்றால் உண்மையை அவர்கள் குறிப்பிட்டிருக்கின்றார்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

அது மட்டுமல்ல, இந்த மாதம் இங்கிலாந்து தேசத்தினுடைய இராணியார் நம்முடைய நாட்டுக்கு குறிப்பாகத் தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்யப்போகிறார் என்பதைப் பெருமையோடு அவர் எடுத்துக்காட்டியிருக்கிறார். அந்தப் பெருமை எதைக் குறிக்கிறது என்றால், தமிழ்நாட்டு மக்களுடைய பண்பாட்டைக் குறிக்கிறது. இந்த நாட்டு மக்களையும், இந்த நாட்டையும் அடிமைப் படுத்தியிருந்தாலும்கூட, அடிமைப்படுத்தியவர்கள் இந்த நாட்டைவிட்டு வெளிச் சென்ற பிறகு, நம்முடைய சகோதரர்களாக, நம்முடைய நண்பர்களாக அவர்களைப் பாவிக்கவேண்டுமென்ற அந்த நோக்கத்தோடு நாம் அவர்களை வரவேற்கிறோம். வரவேற்கும்போது நாம் அவரை மிகச் சிறப்புடன் வரவேற்க வேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து, அவர் குறிப்பிட்டிருக்கும் இந்தக் குறிப்பிலே, நெய்வேலித் திட்டத்துடன் இணைந்துள்ள மின்சார நிலையம், உரத் தொழிற்சாலை, பிரிக்கெட்டிங் தொழிற்சாலை, களி மண் சுத்திகரிப்புத் தொழிற்சாலை ஆகிய திட்டங்களில் எல்லாம் வேலை திருப்திகரமாய் நடந்தேறி வருகிறது என்று சொல்லியிருக்கிறார். குறிப்பாக, உதகமண்டலத்தில் கச்சா பிலிம் தொழிற்சாலை ஏற்படப்போவது சம்பந்தமாகவும் குறிப்பிட்டிருக்கிறார். அந்தத் தொழிற்சாலையை நீலகிரி ஜில்லாவில் ஏற்படுத்த வேண்டும் என்பதைப்பற்றிச் சர்க்காரும் சொல்லிக்கொண்டு இருந்தது. நாங்களும் சொல்லியிருக்கிறோம். அந்தத் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கு அறிகுறியாக, அதற்கான நிலத்தில், "சைட் பார் பிலிம் பாக்டரி" என்று போர்டு போடப்பட்டிருக்கிறது. இருந்தாலும் வேலை துரிதமாக நடைபெறுவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அரசாங்கம் திட்டமாகச் சொல்லவேண்டும். அந்தத் தொழிற்சாலையை அங்கு உடனடியாக ஏற்படுத்திவிடவேண்டும். வேறு எந்தத் தொழிற்சாலையையும் அமைப்பதற்கு நீலகிரி ஜில்லாவின் சீதோஷ்ண ஸ்திதி அமையாததால், அங்கிருக்கும் மக்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கவேண்டுமானால், இதைப்போன்ற தொழில்கள்தான் அங்கு இருக்கும் வேலை

20th January 1961] [Sri J. Matha Gowder]

வாய்ப்புக்களை ஏற்படுத்தமுடியும் என்று சொல்லிக்கொள்கின்றேன். அதை அங்கு ஏற்படுத்தி அங்குள்ள மக்களுக்கு வேலை வாய்ப்பு அதிகமாக ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். அரவங்காட்டில் இருக்கும் தொழிற்சாலையில் நீலகிரி ஜில்லா வாசிகளுக்கு அதிகமாக வேலை வாய்ப்பு கொடுக்காமல், இதர ஜில்லா, இதர ராஜ்யங்களில் உள்ளவர்களுக்கெல்லாம் அதிகமாக வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி எடுத்துச்சொல்லிக் கொண்டிருக்கிறோம். இருந்தாலும், மத்திய சர்க்கார் அதை நிர்வகிக்கும் காரணத்தால் அங்குள்ள அதிகாரிகளைச் சரியானபடி அணுக முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. இதைச் சர்க்கார் ஆலோசித்து, கச்சா பிலிம் தொழிற்சாலையில் நீலகிரி ஜில்லா மக்களுக்கு அதிகமான விகிதாசாரத்தில் வேலை கொடுக்கும்படியாக சர்க்கார் திட்டவட்டமாக முடிவுக்கு வரவேண்டுமென்று நான் மிகப் பணிவோடு கேட்டுக்கொள்கின்றேன். அங்கு இருக்கக்கூடிய மக்கள் வேறு துறையில் எந்தத் தொழிற்சாலையையும் ஏற்படுத்துவதற்கு முடியாமல் இருக்கிற காரணத்தினால் இப்படிச் சொல்கிறேனே தவிர வேறு மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் அங்கே வரக்கூடாது. வேறு மாகாணத்தைச் சேர்ந்தவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கக்கூடாது என்பதற்காகச் சொல்லவில்லை. நிச்சயமாக அங்கு இருக்கக்கூடியவர்களுக்கு இத்தனை சதவிகிதம் என்று ஒதுக்கவேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

அங்கு இருக்கக்கூடிய மக்கள் பெரும்பாலும் பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்களுக்கு இந்த மாநிலம் முழுவதற்குமாக ஒரு திட்டம் வகுக்கவேண்டும். அவர்களை முற்போக்குக்குக் கொண்டுவருவதற்கு என்ன என்ன செய்யமுடியுமோ அவ்வளவையும் செய்வதற்கு ஒரு ஏற்பாடு செய்யவேண்டும். அதை இதுவரையில் எல்லா மாநில அளவிலும் செய்தார்களா என்பதைப் பார்க்கும்போது அவ்வளவாகச் செய்யவில்லை என்று சொல்ல விரும்புகிறேன். பிற்பட்ட சமூகம் முன்னேறவேண்டும். இன்றைக்கு கல்வி அமைச்சர் அவர்கள் சொல்கின்ற நேரத்தில் பார்க்கும்போது இனி அடுத்த ஆண்டில் இருந்து ஏழை பணக்காரன் என்ற அடிப்படையில் ஏழை மாணவர்களுக்கு மாத்திரம் இலவசக் கல்வி அளிக்க ஏற்பாடு செய்யப்படும், சாதி அடிப்படையில் இருக்காது என்றார்கள். சாதி ஒழியவேண்டும் என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஆனால் கல்வியிலே பின் தங்கியிருக்கிற மக்களுக்குக் கொடுத்திருக்கக் கூடிய சலுகைகளைப் பறித்துவிடாமல் இந்தத் திட்டத்தைக் கொண்டுவரவேண்டும் என்று வற்புறுத்துகிறேன். பின்தங்கிய சமூகத்தினரைப் பொறுத்தவரையில்—சாதி அடிப்படையிலோ அல்லது ஜில்லா அடிப்படையிலோ அல்லது தாலுக்கா அடிப்படையிலோ இந்தச் சலுகை இருந்துகொண்டிருக்கவேண்டும். அப்படியின்றி பிற்பட்ட சமூகத்தினரையும் இதர சமூகத்தினரைப்போலவே ஒன்றாக வைத்து ஏழை பணக்காரன் என்ற அடிப்படையில் பார்ப்பது என்றால் இதனால் அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அதிகமாகப் பாதிக்கப் படுவார்கள். ஆகவே இன்றைக்கு பிற்பட்ட சமூகத்தினருக்கு

[Sri J. Matha Gowder] [20th January 1961

நாம் கொடுத்து வருகிற சலுகைகள் எந்தவகையிலும் பாதிக்கப் படாமல் இவ்விஷயம் கவனிக்கப்படவேண்டுமென்று பணிவன் புடன் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீலகிரி ஜில்லாவைப் பொறுத்த வரையில்— மாநிலம் மாத்திரம் அல்ல—அகில இந்தியாவிலேயே சிறிய தேயிலை உற்பத்தி செய்கிறவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். அவர் களுக்கு பலவிதமான வரியினால் சொல்லமுடியாத கஷ்டம் உண்டா கிறது. அக்ரிகல்சரல் இன்கம்டாக்ஸ் ஒன்று, வருமான வரி இரண்டு, கலால் வரி மூன்று, விற்பனை வரி நான்கு என்று பல வரியினால் அவர்கள் கஷ்டம் அடைகிறார்கள். இன்றைக்குக் கேள்வி நேரத்தின்போதுகூட நான் கேட்டிருந்தேன். தேயிலைக்குக் கலால் வரியைச் சேர்த்துவிடவேண்டுமென்று கேட் டோம். அஸ்ஸாம் மாகாணத்தவர்கள் எதிர்க்கிறார்கள் என்று மத்திய அரசாங்கம் ஒப்புக்கொள்ளவில்லை என்றார்கள். இந்த மாநிலத்தின் பணம் எல்லாம் இந்த மாநிலத்திற்கு வராமல் வெளியே போகிறது. பெரிய தேயிலைத் தோட்டக்காரர்கள் இங்கே விற்பது இல்லை. இங்கே விற்பனை வரியும் அவர்கள் கொடுப்பது இல்லை, சிறிய தேயிலை உற்பத்தி செய்கின்றவர்கள் தான் இந்த மாநிலத்தின் விற்பனை வரி கட்டுகிறார்கள். கலால் வரியோடு இணைத்துவிட்டோமானால் ஒரு பைசா என்றால்கூட பல கோடிக் கணக்கான ரூபாய் வருவதற்கு வாய்ப்பு ஏற்படும். அதேசமயத் தில் சிறிய தேயிலை உற்பத்தியாளர்களுக்கு ஏகப்பட்ட கணக்கு வைத்துக்கொள்ளவேண்டிய தொல்லை இல்லாமல் போகும். ஆகவே இதை மத்திய சர்க்காரிடம் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ள வேண்டும் என்று பணிவன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதுமாத்திரம் அல்ல. நீலகிரியை எடுத்துக்கொண்டால் ரோடுகள் எல்லாம் மோசமாக இருக்கிறது. இந்த ரோடுகளைப் பற்றி சட்டமன்றத்திற்கு நான் வந்த நாள் முதற்கொண்டு சொல்லி வருகிறேன். நீலகிரி ஜில்லா ரோடுகளுக்கும், சமவெளிப் பிரதேச ரோடுகளுக்கும் அதிகமான வித்தியாசம் உண்டு. இரண் டாயிரம், மூவாயிரம் ரூபாய் இருந்தால் சமவெளிப் பிரதேசத்தில் ஒரு மைல் ரோடு போடலாம். ஆனால் நீலகிரி ஜில்லாவைப் பொறுத்த வரையில் ஒரு பர்லாங்குகூடப் போட முடியாது. அப்படி இருக்க ஜனத்தொகை அடிப்படையில்—பர்காபிடா முறையில் நீலகிரி ஜில்லா ரோடுகளுக்காக மற்ற மாகாணங் களோடு சேர்த்து வைத்து பணம் ஒதுக்கினால் அங்கே எந்த ரோடும் போட முடியாது. இதனால் அந்த ரோடுகள் எந்தக் காலத்தில் முன்னேறும் என்றே எனக்குத் தெரியவில்லை. இதை அடிக்கடி சொல்லிக் கொண்டு வருகிறேன். எந்த நிலையை எடுத்துக் கொண்டாலும் பர்காபிடா முறைப்படி நீலகிரி ஜில்லா வுக்கு ஒதுக்குவது என்றால் அந்த ஜில்லா எந்தக்காலத்தும் அபி விருத்தி அடைய முடியாது. சாதாரணமாக சமவெளிப் பிர தேசத்தில் மண் ரோடோ, கப்பி ரோடோ போட்டுவிட்டால் அது நிற்கும் என்று நினைக்கிறேன். ஆனால் நீலகிரி ஜில்லாவில் போட்ட மறுநாளோ ஒரு மழை அடித்தால் போதும். ரோடு

20th January 1961] [Sri J. Matha Gowder]

இருக்கிற இடம் தெரியாமல் அடித்துக்கொண்டு போய்விடும். மக்களுடைய பணமும் நஷ்டம். சர்க்காருடைய பணமும் நஷ்டம். ஆகவே தகுந்தமுறையில் நீலகிரி ஜில்லா ரோடுகளைப் போடுவதற்குச் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும், பர்-காபிடா முறையை அந்த ஜில்லாவைப் பொறுத்தவரையில் கையாளக் கூடாது என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். இதற்குத் தனியாகவே திட்டம் போடவேண்டும். ஒவ்வொரு தாலுக்கா வாரியாக எடுத்து, பிர்க்கா வாரியாக எடுத்து, பஞ்சாயத்து யுனியன் மூலமாகத் தார் ரோடு போடவேண்டும் என்ற நிபந்தனையை ஏற்படுத்தி எல்லா ரோடுகளுக்கும் தார் போடுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மூலதனப் பொருள்கள் அங்கே இருக்கின்றன. நீலகிரியில் காகிதத் தொழிற்சாலையை ஏற்படுத்துவது மிகவும் நியாயமாகும். அதுதான் தர்மம் என்று சொல்லிக்கொண்டு அங்கு ஒரு காகிதத் தொழிற்சாலையை ஏற்படுத்துவதற்கு—தனியார் துறையிலோ—சர்க்கார் துறையிலோ—முயற்சி செய்யவேண்டும்.

மேலும் களிமண் உற்பத்தி பற்றி பேசப்பட்டது. அதற்காக சில கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் சுத்திகரிக்கப்படுகிற களிமண் சமவெளி பிரதேசத்திற்குக் கொண்டுவரப்பட்டு—இங்கே தொழிற்சாலையை நிறுவ ஏற்பாடு செய்வார்களோ என்ற ஐயம் இருக்கிறது. அதைத் திட்டவட்டமாகத் தெரிவிக்க வேண்டும். அப்படிச் செய்வதாக இருந்தால் அதைக் கைவிட வேண்டும். முக்கியமாக அந்த ஜில்லாவில் இருக்கக்கூடிய மக்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்க அங்கேயே தொழிற்சாலை ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக காதி போர்டு ஏற்படுத்தி அதன் காரணமாக வில்லேஜ் இண்டஸ்டிரீஸ் ஆபீசர்கள் என்று இருந்தவர்களை நீக்கிவிட்டார்கள். அதன் காரணமாக இன்றைக்கு நீலகிரி ஜில்லாவில் கிராம சிறுதொழில் அதிகாரிகள் நீக்கப்பட்டார்கள். அதேசமயம் காதி போர்டு அதிகாரி யாரும் தனியாக அந்த ஜில்லாவுக்குக் கிடையாது. நீலகிரி ஜில்லாவை கோவை மாவட்டத்தோடு சேர்த்து, கோவையில் தலைமைக் காரியாலயம் என்றும் அங்கிருந்து அதிகாரி நீலகிரி மாவட்டத்திற்கு வந்து கவனித்துக்கொள்ளவேண்டும் என்றும் செய்திருக்கிறார்கள். இது அவ்வளவு நியாயமான ஏற்பாடா என்று தெரியவில்லை. நீலகிரி ஜில்லா பலவகையிலும் பிற்போக்காக இருக்கிறது. இப்போதுதான் அங்கே என்ன என்ன சிறு தொழில்களை ஏற்படுத்தலாம் என்று யோசிக்கப்பட்டு வருகிறது. அது ஒரு சிறிய ஜில்லாவாக இருக்கலாம் என்றாலும் அது ஒரு ஜில்லா என்ற கண்ணோட்டத்தோடு எதையும் பார்க்கவேண்டும். "நீலகிரி ஜில்லாதானே, கோவை ஜில்லாவில் ஒரு தாலுக்கா போன்றது" என்கிற மனப்பான்மை கூடாது. அது ஒரு சிறிய தாலுக்கா மாதிரியாக இருந்தாலும் இந்த மாநிலத்திலேயே புகழ்பெற்ற சுகவாசஸ்தலம் என்ற புகழை நமக்கு அளித்து வருகிறது. ஆகையால் அந்த ஜில்லாவையும் மற்ற ஜில்லாக்களைப்போல சம அந்தஸ்துடன்

கவனித்து—ஜில்லா அதிகாரிகள் நியமனத்திலிருந்து மற்ற எல்லா விஷயங்களிலும் ஒரேமாதிரியாக நடத்தவேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

12 noon. கடைசியாக, அந்த ஜில்லாவில் இருக்கக்கூடிய ஆசிரியர்களுக்கு "ஹில்" அலவன்ஸ் கொடுக்கப்படுகிறது. இதற்கு முன்பெல்லாம் எப்படி கொடுக்கப்பட்டிருக்கிறதென்றால் உபாத்தியாயர்களின் அடிப்படைச் சம்பளத்தில் பாதியை மலேவாச அலவன்ஸ் என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்று திருத்தியமைக்கப்பட்ட சம்பள அடிப்படையில் அவர்களுக்கு எந்த அடிப்படையில் ஹில் அலவன்ஸ் நீங்கள் கொடுக்கப்போகிறீர்கள் என்று புரியாமல் திருத்தியமைக்கப்பட்ட சம்பள விகிதத்தில் ஹில் அலவன்ஸ் அவர்களுக்கு இன்னும் கொடுக்கப்படவில்லை. அதை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். இதற்கு என்ன காரணம் என்று கேட்டால், சர்க்கார் முடிவு எடுக்கவில்லை என்று சொல்கிறார்கள். அடிப்படைச் சம்பளத்தை ஏன் அதிகரித்தோம் என்றால் சம்பளம் குறைவாக இருக்கிறது என்று அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. அந்நிலையில் அவர்களுக்கு அடிப்படைச் சம்பளத்தில் பாதியை மலேவாச அலவன்சாக கொடுக்கவேண்டுமென்றும், அதற்கான உத்தரவுகளை உடனடியாக போடவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு நான் எனது வார்த்தையை முடித்துக் கொள்கிறேன், வணக்கம்.

* **Sri V. K. KOTHANDARAMAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமக்கு முன்னால் இருக்கக்கூடிய கவர்னர் அவர்கள் உரை மீது வழக்கம் போல் வந்திருக்கக்கூடிய உரை மீது நாங்களும் வழக்கம் போல் பதில் செல்லக்கூடிய ஒரு நிலைக்கு வருந்துகிறேன். இந்த உரையில் பல அம்சங்கள் நல்லது என்று இருந்த போதிலும்கூட உண்மையில் இன்று பொது மக்கள் பல ஆண்டு காலமாக, வாழ்க்கைத் தரத்தையொட்டி விலைவாசி நிர்ணயம் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு வரக்கூடிய இந்த நிலையில், நாங்கள் ஏதோ விலைவாசி நிர்ணயம் செய்யப் போகிறோம் என்பதுபற்றி இந்த ஆண்டு ஏற்றுக் கொண்டிருப்பதைப் பற்றி யாவது நாங்கள் பாராட்டுகிறோம். ஆனால் விலைவாசி நிர்ணயம் செய்ய வேண்டுமென்பது பற்றி இதுவரை எதிர்க்கட்சியினர் சொல்கிறார்களேயொழிய, ஆனால் இதுவரையில் திட்டவட்டமான சரியான ஒரு திட்டத்தை கொடுக்கவில்லை என்று சொல்லி கவர்னர் அவர்கள் உரையை ஆதரித்துப் பேசிய கனம் அங்கத்தினர் செல்வராஜ் அவர்கள் எடுத்துக்கூறினார்கள். நான் அவருக்கு தங்கள் மூலமாக சொல்ல ஆசைப்படுகிறேன், கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பலமுறை திட்டங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன, அதை அமைச்சர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் அல்லது அதிகாரிகளிடத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அதேபோல் எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள் விலைவாசிகளை கட்டுப்படுத்தவேண்டுமென்பது பற்றி ஒரு ஆண்டு காலத்திற்கு முன்னால் நடத்திய கிளர்ச்சியின் போதுகூட அதற்கான திட்டங்கள் கொடுக்கப்பட்டது என்பதை நான் இங்கு சொல்லிக்

20th January 1961] [Sri V. K. Kothandaraman]

கொள்ள ஆசைப்படுகிறேன். இதுவரை கனம் அமைச்சர் அவர்கள், விலைவாசி சம்பளத்தை விரட்டுகிறது, சம்பள உயர்வு விலைவாசியை விரட்டுகிறது என்று எப்படி விலைவாசியைக் கட்டுப் படுத்துவது என்று அதை ஏற்றுக் கொள்ள முடியாது நிலையில் இருந்து இப்போதாவது விலைவாசிகளை கட்டுப்படுத்த வேண்டும் என்கிற அளவிற்கு வந்திருக்கிறார்கள். பத்து வருட காலத் திற்குப் பிறகு இந்த அளவிற்கு ஒரு முடிவிற்கு வந்திருந்தாலும் விலைவாசிகளை கட்டுப்படுத்துவதற்கு இன்னும் எத்தனை வருடங்கள் பிடிக்கும் என்பதாவது திட்டவட்டமாக தெரிய வேண்டும். இதைச் சொல்லி விட்டால் விலைவாசி குறைந்து விடு மென்று சொல்லிவிட முடியாது. குறிப்பாக இன்று நம்மிடம் கொடுத்திருக்கக்கூடிய விலைவாசிகளின் ஒரு லிஸ்ட்டில், சென்னை நகரத்தில் எந்தளவு இருக்கிறது என்றால், அதைப் பார்த்தால் தெரியும். ஜனவரி 1960-ல் 441 புள்ளியாக இருந்தது, டிசம்பரில் 488 புள்ளியாக மாறியிருக்கிறது. அதேபோன்று ரீட்டேல் ப்ரைசஸ்-யை எடுத்துக்கொண்டால் விறகு முதற்கொண்டு உணவுப் பண்டங்கள் வரை அளவு கடந்து விலை உயர்ந்து கொண்டிருக்கிறது. மாதத்திற்கு மாதம், வருடத்திற்கு வருடம் விலைவாசி உயர்ந்து கொண்டே போகக்கூடிய இந்த நேரத்தில், திட்டவட்டமாக இத்தனை மாதங்களுக்குள் நாங்கள் செய்யப் போகிறோம், அதற்கு வேண்டி ஒரு கமிட்டி அமைக்கப் போகிறோம் என்பதுபற்றி நடவடிக்கைகள் எதுவும் இல்லை என்று தான் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆனால் அமைச்சர் அவர்கள் சொல்லலாம், அது எங்கள் கையில் இல்லை என்று. அது மத்திய அரசாங்கத்தின் கையில் இருக்கிறது என்று சொல்லி காலம் கடத்துவதற்காகக்கூட சொல்லலாம் என்று நினைக்கிறேன். விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகுமானால், மனிதனின் வாழ்க்கை எந்தளவு பாதிக்கப்படும் என்பதை சிந்தித்துப் பார்த்து தீவிர நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதேபோன்றுதான் இன்று பத்தாவது வரையில் இலவசமாக சம்பளம் இல்லாமல் படிக்க வைக்கப்போகிறோம் அதற்காக சட்டம் கொண்டுவரப் போகிறோம் என்று வேலூரில் காங்கிரஸ் மகாநாடு நடந்தபோது முதலமைச்சர் அவர்கள் பல கூட்டங்களில் பேசியிருக்கிறார்கள். அது எல்லாப் பத்திரிகைகளிலும் வந்திருக்கிறது. ஆனால் அது பற்றி இந்த உரையில் ஒன்றுமே கிடையாது. ஆனால் தேர்தல் சமீபத்தில் ஒரு வேளை வெளியிட்டாலும் வெளியிடலாம் என்று நினைக்கிறேன். அதேபோன்று இன்று கிருஷ்ணா, கோதாவரி தண்ணீர், வீணாகப் போகக்கூடிய தண்ணீரை பாலாற்றில் கொண்டு வருவதற்காக வேண்டி வருடக்கணக்கில் பேச்சு வார்த் தைகள் நடந்து கொண்டேயிருக்கிறது. வருடக்கணக்கில் பதில் சொல்லக்கூடிய நிலையில் அதை நமக்கு நம் உபயோகத்திற்குக் கொண்டுவர என்ன தீவிரமான முயற்சி எடுக்கப்பட்டது? அது பற்றிய பேச்சே கிடையாது. பின், இந்த ராஜ்யத்திற்கு தமிழ் நாடு ராஜ்யம் என்று வைக்க வேண்டுமென்று கேட்டால், சென்னை என்பதற்கு எவ்வளவு மதிப்புடையதாக இருக்கிறது, மெட்ராஸ்

[Sri V. K. Kothandaraman] [20th January 1961

என்ற பெயரை எடுத்து விடலாமா என்று சொல்லக்கூடிய ஒரு வாதம் இருக்கிறது. இன்று பம்பாயைவிட சென்னைக்கு மதிப்பா, கல்கத்தாவைவிட சென்னைக்கு மதிப்பா, எல்லாவற்றிற்கும் மதிப்பு இருக்கிறது. அப்படியிருந்தும், கல்கத்தா ராஜ்யம் என்று அங்கே பெயர் வைக்கவில்லை, பம்பாய் ராஜ்யம் என்று வைக்கவில்லை. ஆகவே, சென்னை ராஜ்யம் என்பதை மாற்றி தமிழர்கள் வசிக்கக்கூடிய இந்த ராஜ்யத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்குப் பதிலாக இன்று காலம் கடத்தி ஒருவேளை தேர்தலுக்கு முன்னால் வைப்பதாக இருந்தாலும் சொல்லிவிட்டால் போதுமானது. கட்டிடத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்கக்கூடிய அளவிற்கு அமைச்சர்கள் மனம் செலுத்தக்கூடிய இந்நேரத்தில் இந்த ராஜ்யத்திற்கு ஏன் அப்படி பெயர் வைக்கக்கூடாது? சென்னை என்பதை மாற்றி விடு என்று கேட்கவில்லை. சென்னை ராஜ்யம் என்று பெயரைத்தான் மாற்றும்படி மக்கள் கேட்கிறார்களே தவிர சென்னை என்ற பெயரை மாற்றிவிடவேண்டுமென்று யாரும் கோரவில்லை. அதேபோல் அரசியல் கைதிகள், 1948-லேயே கைது செய்யப்பட்டு இன்று பத்து, பனிரெண்டு ஆண்டுகளாக அவர்கள் ஜெயிலில் இருந்து வருகிறார்கள். அந்த கைதிகளுக்கு பிறகு தண்டனை அடைந்தவர்களையெல்லாம் சமீபத்தில் பெப்ரவரி அல்லது மார்ச்சில் விடுதலை செய்யக்கூடிய அளவு உத்தரவு பிறப்பித்திருக்கக்கூடிய சர்க்கார் அரசியல் கைதிகளை விடுதலை செய்ய ஏன் தயங்குகிறார்கள் என்பது நமக்கு புரியவில்லை. பக்கத்திலுள்ள ஆந்திர ராஜ்யம், மற்ற ராஜ்யங்களில் ஜன்ம தண்டனை அடைந்த அரசியல் கைதிகள் உட்பட மற்ற கைதிகளை விடுதலை செய்யும் அளவு நிலை இருக்கும்போது இங்கு அவர்களை விடுதலை செய்யத் தயங்குகிறார்கள் என்று சொன்னால் அரசியல் நோக்கத்தோடு இன்று எதிர்க் கட்சிகளை நசுக்க வேண்டும் அவர்களை பழி வாங்க வேண்டும் என்ற கண்ணோட்டத்தோடுதான் விடுதலை செய்வதற்கு பின் வாங்குகிறார்கள் என்று ஏன் சொல்லக்கூடாது என்று கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே, குடியரசு தினமாகிய 26-ம் தேதியிலாவது அவர்களை விடுதலை செய்யவேண்டும். அரசியல் கைதிகளை விடுதலை செய்யவேண்டுமென்பது பற்றி இதில் ஒன்றுமேயில்லையே என்று அறிய வருத்தப்படுகிறேன். அடுத்தபடியாக, உணவு உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டுமென்று சொல்லப்படுகிறது. வரவேற்கிறோம். அதற்காக, நவீனக் கருவிகளை அதிகப்படியாக நாம் கொடுத்து உதவி செய்யவேண்டும். அதிகப்படியாக உரம் கொடுத்து உதவி செய்யவேண்டும். இன்று விநியோகம் செய்யக்கூடிய அரைகுறை உரம்கூட, 39, 40 ரூபாய் என்று கண்ட்ரோல் ரேட் இருந்தபோதிலும் கள்ள மார்க்கட் ரேட்டிலேயே இன்று வாங்கும் நிலையிருக்கிறது. கள்ள மார்க்கட்டில் விற்பனை செய்யக்கூடிய அளவு கலப்படம் செய்து விற்பதற்குரிய நிலையிருக்கிறது. இதில் தீவிர நடவடிக்கைகள் எடுக்க வேண்டாமா? இதைக் கேட்டால் காலையில் உணவு அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கும் போது எல்லாவற்றிலும் கலப்படம் செய்வது போல் இதிலும் கலப்படம் செய்து வருகிறார்கள் என்று சொன்னார்கள். உணவில் கலப்படம்

20th January 1961] [Sri V. K. Kothandaraman]

செய்து சிலர் இறந்து விட்டார்கள் என்பதற்காக அவர்கள் பேரில் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கக்கூடிய ஒரு நிலை இருக்கும்போது மக்களை கொலை செய்யக்கூடிய அளவு உற்பத்தி செய்ய முடியாது களறு பூமியாக செய்யக் கூடியது போன்ற மோசமான போக்கை கண்டித்து இதைத் தடுக்க ஏதாவது சட்டம் இருக்கிறதா என்று பார்த்தால் ஏதோ ஐந்து அல்லது பத்து ரூபாய் அபராதம் விதிக்க முடியுமே தவிர ஒரு வாரம் அல்லது இரண்டு வாரம் கம்பி எண்ணக் கூடிய அளவிற்கு அவர்கள் பேரில் நடவடிக்கைகள் எடுக்கக்கூடிய அளவு ஒன்றுமே கிடையாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அப்படி எடுத்திருக்கிறார்கள் என்று சொன்னால் எந்தெந்த ஜில்லாவில், யார் யார் பேரில் எடுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லவே முடியாது. ஆகவே தான் இதைப் பற்றி கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று தான் நமது ராஜ்யத்தில் ஆற்றங்கரை யோரமாக ஆராய்ச்சி செய்ததாகவும், அதில் எண்ணெய் வளம் அதிகமாக நிறைந்திருப்பதாகவும் சொல்லப்பட்டது. இதற்கான நடவடிக்கைகள் எப்போது ஆரம்பிக்கப் போகிறார்கள், இந்தத் திட்டத்தின் விவரம் என்ன என்பதைப்பற்றி ஒன்றும் இந்த அறிக்கையில் சொல்லப்படவில்லை என்பதை நான் ஞாபகப் படுத்த விரும்புகிறேன். அதே போன்று தான் கிராமத்திற்கு கிராமம் ரோடுகளின் நிலைமை எப்படியிருக்கிறது என்பதைப் பார்ப்போமேயானால், மிகவும் மோசமான நிலைமையில் இருந்து வருவதைத்தான் நாம் பார்க்க முடியும். ஏற்கனவே இருந்து கொண்டிருக்கிற குறுகிய ரோடுகளில் நீளமானதும் அகலம் கூடியதுமான பஸ்கள் போய்க்கொண்டிருப்பதின் காரணமாகத் தான் பலவிதமான ஆக்ஸிடன்ட்கள் நிகழ்ந்து கொண்டிருப்பதை நாம் பார்க்கின்றோம். அதோடு ரோடு வசதி செய்து கொடுப்பதில் சர்க்கார் அதிகாரிகள் ஆமை வேகத்தில் போய்க்கொண்டிருக்கின்ற நிலைமையையும் நாம் பார்க்கின்றோம். உதாரணமாக குடியாத்தம் தாலுகாவில் ஒரு கிராமத்தில் அங்குள்ள விவசாயிகள் தங்களுக்கு ரோடு போட வேண்டும், அதற்கான பணம் கொடுக்கிறோம் என்று முன் வந்தும் கூட அதற்கான இடத்தை அக்கெவயர் பண்ணுவதற்கு எந்த விதமான நடவடிக்கையும் எடுத்திருப்பதாக தெரியவில்லை. காரணம் நூற்றுக் கணக்கில் நிலங்களை வைத்துக்கொண்டிருக்கின்ற பெரிய நிலப் பிரபுகள் காங்கிரஸ்காரர்களுடைய உதவியைப் பெற்று நிலங்களை கொடுப்பதற்கு காலங்கடத்திக் கொண்டிருக்கக்கூடிய நிலைமையைத்தான் நம்மால் பார்க்க முடிகிறது. குறிப்பாக மாச்சம்பட்டி என்ற கிராமத்திற்கு ரோடு வசதி செய்து தர வேண்டும் என்று கோரி 10, 15 வருடங்கள் ஆகின்றன. அதே போன்றுதான் அரவட்லா என்ற கிராமம் மலைப்பிரதேசத்தில் இருக்கிறது. விறகுகளை கொண்டு போவதற்கு மட்டும் லாரி போவதற்கு வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த கிராமத்திலுள்ள மக்களுக்குத் தேவையான உணவுப் பொருட்கள், மற்றுமுள்ள துணிமணிகள் இவைகளை எல்லாம் கொண்டு போவதற்கு

[Sri V. K. Kothandaraman] [20th January 1961

ரோடு வசதி கிடையாது. அவர்களுக்கு தேவையானப் பொருட்களை எல்லாம் கழுதை மீது ஏற்றிக்கொண்டு போகக்கூடிய நிலைமைதான் இப்போதும் இருந்து கொண்டு இருக்கிறது என்பதை நான் இந்த நேரத்தில் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வரவிரும்புகிறேன். ஆகவே அந்த கிராமத்திற்கு தேவையான ரோட்டை உடனடியாக போட்டுக்கொடுப்பதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே போன்று, தொழிற்சாலைகள் ஏற்படுத்துகின்ற விஷயத்தில், ஒரு பக்கத்தில் என்னென்ன தொழிற்சாலைகள் எல்லாம் ஏற்படுத்தியிருக்கிறோம் பார்த்தீர்களா என்றெல்லாம் சொல்லக்கூடிய நேரத்தில், மற்றொரு பக்கத்தில் எத்தனையோ தொழிற்சாலைகள் மூடப்படுகின்றன, அதை திறந்து வைப்பதற்கு எந்த விதமான சட்டத்தையும் கொண்டு வாராமல் இருக்கிறார்கள். திறந்து இருக்கின்ற தொழிற்சாலைகளை மூடாமல் பார்த்துக்கொள்வதற்கு என்ன திட்டங்கள் இதுவரையில் போடப்பட்டிருக்கிறது ? இதை இந்த நேரத்தில் கனம் அமைச்சர் அவர்களுடைய ஞாபகத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். அதைப்போன்று அரிஜனங்களுடைய வீட்டை எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு சிறிய வீட்டிலும் ஏழெட்டு குடும்பங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய வீடுகட்டி கொடுப்பதில், மனைக்கட்டுகள் கொடுப்பதில் வருஷக் கணக்கில் காலதாமதம் ஆகிறது, என்பதை நான் மிகவும் வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சில இடங்களில் இதற்காக 10, 15 வருடங்களாக கேட்டுக்கொண்டிருக்கிறார்கள், சில இடங்களில் இதற்கான பணம் வசூலிக்கப்பட்டிருக்கிறது. இருந்தும் கூட விரைவான நடவடிக்கைகள் எடுத்திருப்பதாக தெரியவில்லை. அதே போன்று தான் விவசாயிகளுக்கென்றும், பீடித் தொழிலாளர்களுக்கென்றும் பலவிதமான சட்டங்களை கொண்டு வந்து நிறைவேற்றியிருக்கிறோம் என்று பெருமைப்பட்டுக்கொள்கிறோம். அதே சமயத்தில் இந்தச் சட்டங்கள் எல்லாம் எந்த நிலையில் அமல் நடத்தப்படுகிறது என்பதைப்பார்த்தால், மிகவும் மோசமான நிலையில் தான் இருந்து கொண்டிருப்பதை நாம் பார்க்கின்றோம். ஆகவே தான் இம்மாதிரிப்பட்ட சட்டங்களை எல்லாம் நல்ல முறையில் அமல் படுத்தக்கூடிய அளவுக்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே போன்று கனம் அங்கத்தினர் செல்வராஜ் அவர்கள் பேசக்கூடிய நேரத்தில், தூத்துக்குடி துறைமுகத்தைப் பற்றி தேர்தல் நேரத்தில் எதிர்க்கட்சிக்காரர்கள் சூதாட்டக் காயாக பயன்படுத்துகிறார்கள் என்று கூறி அதற்காக ஒரு கதையையும் சொன்னார்கள். சாவித்திரி தன்னுடைய கணவன் இறந்து போனபோது, கணவனை திரும்ப பெறுவதற்கு யமதர்மராஜாவை ஏமாற்றி பிள்ளைவரம் வாங்கியதாகவும், அதன் மூலம் தன்னுடைய கணவனை திரும்ப அடைந்ததாகவும் தெரிவித்தார்கள். அதே போன்று தூத்துக்குடி துறைமுகத்தை இந்த அமைச்சர்களால் கேட்டுப்பார்த்தும் கிடைக்காத காரணத்தினால், இதைப்பற்றி மத்திய அரசாங்கத்தினிடத்தில்,

20th January 1961] [Sri V. K. Kothandaraman]

தேர்தல் வருகின்ற நேரத்தில் எதிர்க்கட்சிக்காரர்களின் பிரச்சாரத்தை எல்லாம் எடுத்துச் சொல்லி யமதர்ம ராஜாவை இருக்கக் கூடிய பிரதம மந்திரி நேருஜியினிடம் போய் இப்போது தூத்துக் குடி துறைமுகத்தைப் பெற்றுக்கொண்டதாகவும் அதை ஒப்பிட்டு இந்த கதையைச் சொல்வதாகவும் தெரிவித்தார்கள். உண்மையாகவே எதிர்கட்சியினர் இதற்காக நடத்தின தீவிரமான பிரச்சாரத்தின் மூலமாகவும் எதிர்கட்சியினர் நடத்திய கிளர்ச்சியின் காரணமாகவும் இப்போது இந்தத் தூத்துக்குடி துறைமுகத் திட்டம் கொண்டு வரப்பட்டதே தவிர மற்றபடி இவர்களாகவே கொண்டு வந்துவிடவில்லை. அதல்லாமல் தேர்தல் நேரத்திற்கு என்று சூதாட்டக் காயாக இதைப் பயன்படுத்துகிறார்கள் எதிர் கட்சிக்காரர்கள் என்று சொல்வது எல்லாம் தங்களைத்தானே ஏமாற்றிக்கொள்வதாகத்தான் இருக்கும் என்பதை அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். ஆகவே இதில் பாகுபாடு இல்லாமல் ஆளும்கட்சி, எதிர்கட்சி என்று பார்க்காமல், எந்தெந்த ஜில்லாக்களுக்கு, எந்தெந்த தாலூக்காக்களுக்கு உடனடியாக என்னென்ன செய்யவேண்டும் என்பதை ஆலோசித்துப் பார்த்து அதில் தீவிரமான முறையில் கவனம் செலுத்தி திட்டமிட்டு வேலை செய்யவேண்டும். அதல்லாமல், இந்தக் காரியத்தை நீங்கள் செய்யவில்லை, நாங்கள்தான் செய்தோம், என்றெல்லாம் சொல்லி அதற்காக கதைகளையும் சொல்லிக் கொண்டிருப்பதில் எந்தவிதமான நன்மையும் இல்லை. அவ்விதம் கதை சொல்வது என்றால் எங்களுக்கும் எவ்வளவோ கதைகளை சொல்லிக்கொண்டிருக்கலாம், என்பதையும் இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக, பல ஆசுபத்திரிகள் திறக்கப்படுகின்றன. பல ஆசுபத்திரிகள் அபி விருத்திச் செய்யப்படுகின்றன. அதைப்பார்த்து நாங்கள் பெருமைப்படுகிறோம். ஆனால் நாம் முக்கியமாக ஆசுபத்திரிகளை பெருக்குவதின் நோக்கம் நமது நாட்டில் வாழ்கின்ற மக்கள் நல்ல ஆரோக்கியத்துடன் வாழ வேண்டும் என்பதுதான். அதே சமயத்தில் நாம் நல்ல முறையில் சுகாதாரத்தை பாதுகாத்துக்கொண்டால் ஆசுபத்திரிகளை அதிகப்படுத்த வேண்டிய அவசியமே இராது. ஆகவே இன்றைக்கு ஒவ்வொரு நகரசபையிலும் ஒவ்வொரு பஞ்சாயத்து போர்டுகளிலும் நல்ல முறையில் சுகாதாரத்தைப் பாதுகாக்கக்கூடிய அளவில் சாக்கடைத் திட்டங்களை தீட்டவும், குடிதண்ணீர் வசதிகளை பெருக்குவதற்குரிய வழி வகைகளை செய்யவும் வேண்டும். அவ்விதம் ஏற்படுத்தினால் அதிகப்படியான அளவில் ஆசுபத்திரிகளை திறக்கவேண்டிய அவசியமேற்படாது. அதே நரேத்தில் இந்த ராஜ்யத்தில் பல இடங்களிலும் டி. பி. வியாதியும், குஷ்ட ரோகமும் பரவிக்கொண்டிருக்கிறது. டி. பி. நோயை எடுத்துக்கொண்டால் இதன் மூலம் 50 லட்சம் பேர்கள் பாதிக்கப்பட்டிருப்பதாக புள்ளிவிவரங்கள் கொடுக்கிறார்கள். அதே போன்று குஷ்ட ரோகத்தினால் பாதிக்கப்பட்டிருப்பவர்களும் 5 லட்சம் முதல் 10 லட்சம் பேர் வரை இருக்கும் என்று தெரிவிக்கப்படுகிறது. இதை தடுக்கவேண்டுமானால் அறுவை சிகிச்சை செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டு

வருகிறது. இதைப்பற்றி நமது மெடிகல் மினிஸ்டர் அவர்கள் ஆயிரம் பேருக்கு ஐந்து பேர்கள் வரை அறுவை சிகிச்சை செய்து கொள்ளவேண்டும் என்று தெரிவிக்கிருர்கள். சீப் செக்ரட்டரி அவர்கள் இதன் மூலம் மொத்தமாக ஒரு லட்சம் பேர்கள் தான் அறுவை சிகிச்சை மேற்கொள்ளவேண்டும் என்று தெரிவித்திருக்கிருர்கள். நான் சொல்லுகின்ற யோசனை என்னவென்ருல், இலவசமாக கட்டாய அறுவை சிகிச்சை முறை கொண்டுவர வேண்டும். அப்போது பணம் கொடுக்க வேண்டிய அவசியமும் இல்லை, அதன் மூலமாக பெருவாரியான அளவில் மக்கள் பயனடைவதற்கும் வசதியாக இருக்கும். ஆகவே இதற்கு தகுந்த முறையில் ஒரு திட்டம் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, வெகுவிரைவில் அரசியல் கைதிகளை விடுதலை செய்யவேண்டும், உயர்ந்து கொண்டே போகும் விலைவாசிகளை கட்டுப்படுத்த வேண்டும், இந்த ராஜ்யத்திற்கு "தமிழ் நாடு" என்று பெயரிட வேண்டும், பீடித் தொழிலாளர்கள் சட்டத்தை உடனடியாக நல்ல முறையில் அமுல் நடத்த வேண்டும், இப்படிப் பட்ட காரியங்களில் எல்லாம் தகுந்த கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI T. KARIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் நேற்று நிகழ்த்திய உரையை உத்தேசித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

ஆரம்பத்திலே, எலிஸபெத் ராணி அவர்கள் இந்த நாட்டுக்கு விஜயம் செய்யப்போகிருர்கள், அவர்களுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிருர்கள். இந்த நாட்டை நம்மிடம் ஒப்புவித்துவிட்டுப் போன அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டியது அவசியம் என்பதையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

கடைசியாக எனக்கு முன்பு பேசிய நண்பர்கள் பலர் நிதி அமைச்சர் அவர்களை இங்கேயிருந்து டில்லிக்கு அனுப்பிவிட வேண்டுமென்று கனம் முதலமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டார்கள்—அம்மாதிரிப் பேசப்பட்டது. நிதி அமைச்சர் அவர்கள் இந்த மாகாணத்திற்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யவில்லை என்ற காரணத்தையொட்டி ஏதாவது சொன்னுர்களா, அல்லது அங்கே சென்று நமக்குப் பெறவேண்டிய பங்கைச் சரிவரப் பெறுவதற்காக அம்மாதிரிச் சொன்னுர்களா என்று தெரியவில்லை. ஏதோ சந்தேகத்தோடு பேசினுர்கள் என்று நினைக்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் விவாதத்திற்கு பதில் சொல்லும்போது, நமது மாநிலத்திற்குப் பெறவேண்டிய பங்கைப் பெற்றுர்களா இல்லையா என்பதை விளக்கமாகச் சொல்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

மழையால் பாதிக்கப்பட்ட இடங்களை அமைச்சர்கள் பார்க்கவில்லை என்று கூட குற்றம் சாட்டப்பட்டது. நாம் பத்திரிக்கையில் பார்த்தோம்—சென்ற ஒரு வாரத்தில் மழையால் பாதிக்கப்

பட்ட பகுதிகளை உள் நாட்டு அமைச்சர் அவர்கள் சென்று பார்த்திருக்கிறார்கள். எல்லா மந்திரிகளும் தீவிரமாகச் செய்தாலும், எல்லாப் பகுதிகளிலும் அமைச்சர்கள் ஒரே தடவையில் ஒன்றும் செய்துவிட முடியாது. முன்பு மழை பெய்யாதபோது, காங்கிரஸ் அரசாங்கம் வந்தது, மழை பெய்யவில்லை என்று குற்றம் சாட்டப்பட்டது. இப்போது மழை அதிகம் பெய்தபோதும் காங்கிரஸ் அரசாங்கம், மழை அதிகம் பெய்து பாழ் செய்கிறது என்று சொல்லுகிறார்கள். நமது சர்க்காரிலே என்ஜினீயர்கள் இருக்கிறார்கள். இதையெல்லாம் பழுது பார்க்க பல நாட்கள் ஆகும் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு ரோடுகள் சேதப்படுத்தப்பட்டுள்ளன. இவைகளையெல்லாம் ஒன்றிரண்டு நாட்களில் பழுதுபார்த்துவிட முடியாது. பல நாட்கள் ஆகும் என்று தெரிந்திருந்தாலும் நண்பர்கள் குற்றம் சாட்டுகிறார்கள் என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

உர வினியோகத்தைப் பற்றிச் சொல்லப்பட்டது. இன்றைக்கு எங்கள் ஜில்லாவிலே ஒழுங்காக வினியோகிக்கப்படுகிறது என்பதை சந்தோஷத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். தனியார்கள் உர வினியோகம் செய்துகொண்டிருந்தபோது குற்றம் குறைகள் இருந்தன. அதைப் பற்றி நான் கூட இதே மன்றத்தில் பேசியது உண்டு. ஆனால் கூட்டுறவு முறையில் விவசாய இலாகாவினால் தற்போது சரிவர வினியோகிக்கப்பட்டு வருகிறது என்பதை இந்த நேரத்தில் மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். உரத்தில் கலப்படம் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இங்கே பேசுவதைப் போலவே பேச்சு சுதந்திரம் இருக்கும் மேடைகளில் வினியோகம் செய்யக் கூடிய மக்கள் இம்மாதிரி கலப்படம் செய்யக் கூடாது என்று நண்பர்கள் அங்கேயும் கூடப் பேச வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு உரத்தில் மட்டுமல்ல உணவில்கூட கலப்படம் செய்கிறார்கள். சர்க்கார் தீவிர நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறார்கள். இருந்தாலும் அவர்கள் பேசுகின்றபோது பொது மேடைகளில் இந்த மாதிரியான தவறான பழக்கத்தை பொது மக்கள் கைவிடவேண்டுமென்று சொல்லுமாறு அவர்களை மீண்டும் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவது திட்ட காலத்தில் உணவு உற்பத்தி பற்றி கவர்னர் பெருமான் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். விவசாயத்திற்கு 80 கோடி ரூபாய் செலவு செய்யப்போகிறார்கள். இப்படி 80 கோடி ரூபாய் செலவு செய்கிற முறையில் விவசாயத் துறையிலும் மற்ற துறைகளிலும் கூட சர்க்கார் தயங்காமல் மக்களுக்கு நன்மை செய்யும் துறையிலும் மற்ற துறைகளிலும் கூட சர்க்கார் தயங்காமல் மக்களுக்கு நன்மை செய்யும் முறையில் திட்டம் வகுத்திருப்பதைப் பற்றி மகிழ்ச்சியடைகிறேன். மேலும், 3-வது திட்ட காலத்தில் திட்டக் குழுவும்கூட விவசாயத்திற்கு முதலிடம் அளித்திருக்கிறது. அந்த முறையில் 80 கோடி ரூபாய் ஒதுக்கி சரிவரப் பகிர்ந்து கொடுப்பதில் சர்க்கார் எவ்வளவு கவனம் செலுத்தவேண்டுமோ அவ்வளவு கவனம் செலுத்தியிருப்பதை

[Sri T. Karia Gounder] [20th January 1961

போலவே மக்களும் செலுத்தினால்தான் நாட்டின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். பாசனத் திட்டங்களில் பரம்பிக்குளத் திட்டம் நிதி அமைச்சரைச் சேர்ந்தது. அவர்கள் ஊரில் செய்துவிட்டார்கள் என்றும் சொல்லுகிறார்கள். எனக்குக்கூட அதில் கொஞ்சம் குறை இருக்கிறது. இவ்வளவு தூரம் அதிகமாக ஆறுகளில் தண்ணீர் வந்து சேதம் ஏற்பட்டபோதிலும் எங்கள் பகுதியில் அதிர்ஷ்டவசமாக அதிகத் தண்ணீர் இல்லை. எங்களுடைய ஆற்றில்—பாலாற்றில்—தண்ணீர் வரவில்லை. செங்கல்பட்டு பகுதியில் மட்டிலும் 6 அடி வெள்ளம் போனதாகப் பார்த்தோம். எங்கள் பகுதியில் 3 அடித் தண்ணீர் தான் போனது. ஆகையால் வெள்ளத்தால் பாதிக்கப்படவில்லை. சென்ற வருஷம் பாலாறு பேசின் திட்டத்தை சர்க்கார் பரிசிலனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் தெரிவித்ததையொட்டி மூன்றாவது திட்டத்திலாவது பாலாற்றுக்கு விமோசனம் தேடவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னர் உரையிலே பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களுச்கு பல கோடி ரூபாய்கள் ஒதுக்கப்படுவதாகச் சொல்லப்பட்டது. அந்தத் திட்டங்களிலே பாலாறுத் திட்டத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்தத் திட்டத்திலே இன்னொரு கஷ்டம் இருக்கிறது. ஆங்கிலேயர் நாட்டை ஆண்ட காலத்தில்—1892-ல்—அந்தத் திட்டத்தை நிறைவேற்ற ஒரு திட்டம் தயார் செய்திருக்கிறார்கள். அந்தத் திட்டம் அந்தக் காலத்திலேயே கைவிடப்பட்டிருக்கிறது. மூன்று ஆண்டுகளுக்கு முன் நீர்ப்பாசன இலாகா மீண்டும் நிறைவேற்றப் பார்த்தார்கள். ஆனால் வசதியில்லையென்று மீண்டும் கைவிடப்பட்டிருக்கிறது. திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படாமல் கைவிடப்பட்டிருந்தும் பாலாறு பேசின் ரூல்ஸ்—அதாவது கறையோரம் கிணறு வெட்டக் கூடாது, மின்சாரம் கொடுக்கக்கூடாது என்று—போட்டிருக்கிறார்கள். எங்களுக்கு மின்சாரம் 20 வருஷங்களுக்கு முன்பு கொடுக்கப்பட்டது. மின்சாரத்தை விஸ்தரிப்பதில் சட்டம் குறுக்கே இருந்து தடை செய்துகொண்டிருக்கிறது. அது விஷயமாக கனம் மராமத்து இலாகா உயர் அதிகாரி பாலாறு பகுதிக்கு வந்து பார்த்து முடிவை சர்க்காருக்குச் சொல்லியிருக்கிறார்கள். கனம் மராமத்து அமைச்சர் அவர்கள் அதில் கவனம் செலுத்தி உத்தரவை மாறுதல் செய்தால் பல பகுதிகளில் மின்சாரத்தை உபயோகப்படுத்திக் கொள்ள முடியும் என்று இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்று கூட இந்த மின்சாரத் திட்டத்திலே சர்க்கார் அதிக கவனம் செலுத்தவில்லை என்று சொல்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் எங்கள் பகுதியில் ஏறக்குறைய எங்கள் இரண்டு ஜில்லாக்களுக்கும்—வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாக்களுக்கும் சேர்ந்து—மூன்று கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கிறது. வரப்போகும் திட்டத்திலே வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாக்களுக்கு 10 கோடி ரூபாய் நிதி ஒதுக்குவார்கள் என்று [illegible]க்கின்றேன்.

20th January 1961] [Sri T. Karia Gounder]

நமக்குக் கிடைத்துள்ள 291 கோடி ரூபாயிலே ஏறக்குறைய 10 கோடி ரூபாய் எங்கள் பகுதிக்கு சர்க்கார் கொடுப்பார்களே யானல், அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதிலே, அதாவது எங்கள் பகுதியில் உள்ள எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் சப்ளை செய்ய முடியுமென்பதைத் தைரியமாக சொல்ல முடியும். ஏறக்குறைய எங்கள் பகுதியில் உள்ள பல கிராமங்களுக்கு மின் சாரம் ஏற்கனவேயே கொடுத்தாகி விட்டது. சில கிராமங்களிலே போதிய சாமான்கள் இல்லாமல், போதிய உபகரணங்கள் கிடைக் காத காரணத்தினல் மின்சார சப்ளை தடைப்பட்டிருக்கின்றதே ஒழிய, மின்சாரம் கிடைக்காது என்ற நிலையில் இல்லை. மின்சார இலாகாவினருக்கு நாங்கள் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றோம். 12-30 p.m.

பாசனத் திட்டங்களைப் பொறுத்தவரையில் சிறிய பாசனத் திட்டங்களுக்காக சர்க்கார் ஒதுக்கியுள்ள பகுதியிலே, அப் பகுதியில் உள்ள உத்தியோகஸ்தர்கள் தீவிரமான கவனம் செலுத் துவார்களேயானல் நிச்சயமாக நாம் வெற்றி காணலாம் என்பதில் சந்தேகமில்லை. சில சமயங்களிலே ஒவ்வொரு அதிகாரியும் பார்த்துப் பார்த்து பேப்பர் வருவதற்கான பல ஆண்டுகள் தடைப்பட்டு விடுகின்றன. அதற்காக வேண்டி தீவிர நடவடிக் கைகள் எடுக்குமாறு அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்- கிறேன்.

அடுத்து, சர்க்கரைத் தொழிலைப்பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மூன்ருவது திட்டக் காலத்திலே 8 சர்க்கரை ஆலைகளை ஏற்படுத்த அரசாங்கம் வகை செய் திருக்கிருர்கள். அதன்படி ஆம்பூரிலே கூட்டுறவு முறை யில் சர்க்கரை ஆலை ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அது பொருளாதாரத் துறையில் நன்கு உயர, அங்குள்ள குடியானவர்களுக்கு நல்ல வசதி செய்து தர வேண்டும் அப்போதுதான் திட்டம் கைகூடும். இரண்டாவது திட்ட காலத்திலே 3 சர்க்கரை ஆலைகள் அமைக்கப்பட்டன அப்படி ஆரம்பிக்கப்பட்டிருந்தும், சர்க்கரை விநியோகத்தில் தடை இருப்பதாக பேசப்படுகிறது. இப்போது அவ்விதத் தடை ஒன்றுமில்லை. காரணம் என்னவென்ருல், நம் நாட்டிலேயிருந்து 3 திட்டக் காலத்திலே 15 லட்சம் டன் சர்க்கரை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டுமென்று திட்டம் வகுக்கப்பட்டிருக் கிறது. மூன்ருவது திட்டக் காலத்திலே திருவண்ணுமலைப் பகுதி யிலே ஒரு சர்க்கரை ஆலை ஏற்பட வேண்டுமென்று குறிப் பிடப்பட்டிருக்கிறது. ஆனல் எங்கள் தாலுகாக்களாகிய திருப்பத்தூர், குடியாத்தம், வேலூர் ஆகிய பகுதிகளுக்கு ஒரு சர்க்கரை ஆலை வேண்டுமென்று கேட்டால், அதற்குத் தேவையான 6 ஆயிரம் எக்கர் சாகுபடி நிலம் தேவைப் படுகிறது என்று கணக்கிட்டு இருக்கிருர்கள். இப்போது இந்த ஆண்டிலே மட்டும் 22 ஆயிரம் எக்கர் நிலம் பயிர் செய்யப்பட்டிருக்கிறது. சர்க்கார் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொண்டு, வெளிநாட்டுச் செலாவணி அதிகரிப்பு பயன்

[Sri T. Karia Gounder] [20th January 1961

அளிக்கும் என்பதை கருத்தில் கொண்டு, எங்கள் திருப்பத்தூர், குடியாத்தம், வேலூர் ஆகிய பகுதிக்கு ஒரு ஆலையை நிறுவனம் செய்வார்கள் என்று என் தாலூகாவில் மட்டும் 10 ஆயிரம் ஏக்கர் பயிர் செய்யப்பட்டிருக்கிறது. அதனால் இவைகளை கவனத்தில் கொண்டு மீண்டும் பல சர்க்கரை தொழிற்சாலைகளை இந்த நாட்டிலே ஆரம்பித்துவைக்கத் தீவிர கவனம் செலுத்துமாறு அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தைப் பற்றி சொல்லப்படுகிறது. தூத்துக்குடி துறைமுகத்தைப் பற்றியும் பேசப்படுகிறது. நாங்கள் எல்லாம் சேர்ந்து கூச்சல் போட்டால்தான், இந்த அமைச்சரவை பயந்து டெல்லிக்குப் போய் இவைகளை நிறைவேற்றிக் கொண்டு வந்தார்களென்று பேசப்படுகிறது. அதைத்தவிர, தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று கூச்சல் போடப்படுகிறது. தமிழ்நாடு என்று பெயர் வைப்பதிலே சர்க்காருக்கு எவ்விதக் கஷ்டமோ, நஷ்டமோ இல்லை. அவர்கள் கேட்காமல் சும்மா இருந்தால் போதும். தானே தமிழ்நாடு என்று பெயர் வைத்து விடுவார்கள். கேட்க கேட்க, நாம் அவர்கள் கேட்டு கொடுப்பதா என்ற பிரஸ்டிஜ் குறுக்கே நிற்கிறது. உபத்திரவம் கொடுக்காமல் இருந்தாலே போதும். இதை ஒரு தேர்தல் பிரச்சினையாக வைத்துக்கொள்ள வேண்டாம். அப்படி வைத்துக் கொள்வதில் அர்த்தமே இல்லை. தமிழ்நாடு என்ற பெயர் தானாகவே வந்துவிடும். இது எனது சொந்த அபிப்பிராயம் என்பதை இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

நெய்வேலியிலே 175 அடி ஆழத்திற்கு கீழேதான் கரி எடுக்க வேண்டும் . இது மனுஷன் செய்யக்கூடிய காரியமல்ல. மெஷின் செய்கிறது. நேரிலே போய்ப் பார்த்தால் இத்திட்டம் ஆமை வேகத்தில் போகிறது என்று மதிப்பிற்குரிய நண்பர் ஒருவர் இங்கு சொன்னதை சொல்லியிருக்க மாட்டார். ஆமை வேகத்தில் போக வில்லை. ரொம்ப வேகமாய் போய் 175 அடி ஆழத்திலிருந்து மண்ணை எடுத்துக்கொண்டு வந்து வெளியே தள்ளுகிறது. அதைத் தவிர அவ்வாறு ஆழத்திலிருந்து எடுக்கப்படும் பக்குவம் அடை யாத கரியை குறைச்சலான கனி சக்தியுள்ள இரும்பை எப்படிக் காய்ச்சுவது என்று நம் நாட்டிலே தெரிந்து கொள்ளாவிட்டாலும், வெளிநாட்டினர் உதவியுடன் ஆராய்ச்சி செய்து வருவது நன்கு தெரிந்த விஷயம். மத்திய சர்க்கார் இந்த ஆண்டிலே 15 கோடி ரூபாய் செலவழிக்க வேண்டுமென்று சொன்னால், 15 கோடிக்கு மேலேயும் நமது சர்க்கார் செலவு செய்கிறார்கள். இதிலே சந்தேகப் படத் தேவையில்லை. நூறு கோடி ரூபாய் செலவிட்டு மத்திய சர்க்கார் அங்கு எடுக்கப்படும் கரியை டெல்லிக்குக் கொண்டு போகப் போவதில்லை. போகவும் முடியாது. அந்த கரி சென்னை யிலேதான் உபயோகப்படப் போகிறது. இதிலே சிறிதும் சந்தேகப் பட வேண்டியதில்லை. அதைக்கொண்டு சேலத்திலே ஆரம்பிக்கப் போகின்ற இரும்பு தொழிற்சாலை வெற்றிகரமாக நடைபெறும் என்பதிலும் யாரும் சந்தேகப்பட வேண்டியதில்லை. தாமதமாக நடைபெறுகின்றது என்று சொன்னால், 175 அடி ஆழத்தில் இருந்து

20th January 1961] [Sri T. Karia Gounder]

கரி தோண்டி எடுக்கப்படுகின்றது என்பதை கவனித்தில் கொள்ள வேண்டும். அப்படித் தோண்டியெடுப்பதிலே பல கஷ்டங்கள் இருக்கின்றன. இடையிலே தண்ணீர் வரும். அதை பம்ப் மூலம் வெளியேற்ற வேண்டியிருக்கிறது. இதைத்தவிர இவ்வளவு ஆழத்திலே பூரா இடத்தில் இருந்தும் கரி எடுக்க சுரங்கப் பாதையை எப்படி அமைப்பது என்று திட்டமிடுவது என்பது அவ்வளவு எளிதல்ல. ஏதோ சாதாரண மெஷின் என்று நினைக்க வேண்டாம். கரி தோண்டி எடுக்கும் மெஷினின் விலை என்னவென்று கேட்டால், 50 லட்சம் என்று சொல்கிறார்கள். அந்த யந்திரத்திற்கு முன்னால் போகும் பெல்ட் விலை என்னவென்று கேட்டால் அதுவும் 50 லட்சம் ரூபாய் என்று சொல்கிறார்கள். இந்த பெல்ட் உதவியால் கரி பல மைல் தூரத்திற்கு வெளியே எடுத்துக்கொண்டு வந்து தள்ளப்படுகிறது. இப்படிப்பட்ட மெஷின் வேலை செய்கிறது என்று சொன்னால், கிடைத்தற்கரிய பெரிய சாதனம் தென்னாட்டிற்கு கிடைத்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இதற்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். அதைவிட்டு, ஆமை வேகத்தில் போகிறது என்றும், தமிழ் நாட்டிற்கு டெல்லி உதவி செய்யவில்லை என்றும் சொல்வது சரியல்ல என்பதை இதுசமயத்திலே நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

தூத்துக்குடி துறைமுகத்தைப் பற்றி நாங்கள் சட்டசபையிலே பேசினோம், பொது மேடைகளிலே சொன்னோம், என்றெல்லாம் பேசப்பட்டது. இப்போது அது பயனளிக்காமல் போகவே, கடலூர் துறைமுகத்திற்கு இப்போது வந்திருக்கிறார்கள். தூத்துக்குடி துறைமுகம் விஷயம் நிச்சயமானதற்கு நாங்கள்தான் காரணம் என்று சொல்கிறார்கள். அப்படிச் சொல்வது தவறு. யாரால் வந்தாலும் அதை யார் ஆளப் போகிறார்கள். நாங்கள் தான் ஆளப் போகிறோமா, அல்லது அவர்கள்தான், நாங்கள் ஆளப்போகிறோம் என்றுதான் சொல்ல முடியுமா, முடியாது. தூத்துக்குடித் துறைமுகத்தைப் பற்றியும், பாம்பிக்குளத் திட்டத்தைப் பற்றியும் எல்லோரும் படித்துப் பார்த்திருக்கிறோம். அனாவசியமாக மக்கள் மனதை கண்டபடி பேசி குழப்ப வேண்டாம். அவர்க்கு இருக்கிற அக்கறையைவிட சர்க்காருக்கு அதிக அக்கறை உண்டு என்பதை இதுசமயம் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நம் நாட்டிலே ஏற்படுத்தியிருக்கும் கல்வித் திட்டத்தைக் கண்டு உலகமே வியக்கிறது. உலகப் பிரதிநிதிகள் என்று சொல்லக்கூடிய எல்லா நாட்டுப் பிரதிநிதிகளும் அதாவது எல்லா நாட்டு அம்பாசிடர்களும், சென்ற ஆண்டிலே வேலூரில் நடைபெற்ற கல்வி மகாநாட்டிலே, நம் மதிப்பிற்குரிய இந்நாட்டின் தலைவரான கனம் ராஜேந்திர பிரசாத் அவர்கள் கலந்துகொண்ட கல்வி மகாநாட்டிலே, கலந்துகொண்டார்கள். பகல் சாப்பாடு, துணி இல்லாத பிள்ளைகளுக்கு துணி, எல்லா பிள்ளைகளுக்கும் இலவசப் படிப்பு என்பதையெல்லாம் பார்த்து, இந்தமாதிரித் திட்டம் ஒன்று உலகத்திலே இருக்கிறதா என்று பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். இப்போது 5 லட்சம் பிள்ளைகளுக்குச் சாப்பாடு

[Sri T. Karia Gounder] [20th January 1961

போட்டுக் கொண்டு வருகிறோம். மொத்தமும் சர்க்கார் செலவில் அல்ல. பொதுமக்களுடைய உதவியைக் கொண்டும், சர்க்காரின் மான்யம் பெற்றும் நடைபெற்று வருகிறது. அடுத்த ஆண்டு காலத்திலே 17 லட்சம் குழந்தைகளுக்குச் சாப்பாடு போடப் போகிறோம். இந்தத் திட்டம் வரவேற்கப்பட வேண்டிய திட்டம் என்பதில் சந்தேகப்பட வேண்டியதில்லை. இந்த நேரத்திலே, அடுத்த ஆண்டு முதல் சர்க்கார் எல்லோருக்கும் 10-வது வகுப்பு வரை இலவசக் கல்வி கொடுக்க இருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சர்க்கார் இதுமாதிரியான திட்டங்களில் எல்லாம் தீவிரமாக கவனம் செலுத்தி வருவது வரவேற்கத் தகுந்தது.

சாதாரணமாக கவர்னர் உரை சிறிது நீளமாக இருக்கும். 10, 15 பக்கம் இருக்கும். இம்முறை சுருக்கமாக உள்ளது. ஆகவே கவர்னர் உரையில் ஒன்றுமில்லை என்று சொல்லப்படுகிறது. சென்ற ஆகஸ்ட் மாதம்தான் கவர்னர் பெருமான் உரை நிகழ்த்தினார். ஆகவே அவர் சுருக்கமாகத்தான் சொல்ல முடியும். நிதி அமைச்சர் 1½ மணி நேரம் பேசுவார்கள். இரண்டு மணி நேரம் வேண்டுமானாலும்கூட பேசுவார்கள். ஆகவே இதற்கு முழு விளக்கமும் கொடுக்கும்படி நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டு, இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்த உதவி சபாநாயகர் அவர்களுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri M. P. PERIASAMI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையின் பேரில் சில வார்த்தைகள் சொல்ல பிரியப்படுகிறேன். அந்த உரையில் பல கோடிக்கணக்கான ரூபாய் செலவில் நமது தமிழ் நாட்டில் நிறைவேற்றவேண்டிய திட்டங்களை குறிப்பிட்டிருக்கிறார்கள். நமது முதல் அமைச்சர் கனம் காமராஜ் அவர்கள் தலைமையில் மற்ற மந்திரிகளும் கூட்டாகச் சேர்ந்து நல்ல முறையில் பல திட்டங்களை அமைத்து, அந்தத் திட்டங்களை கவர்னர் பெருமான் வெளியிட்டிருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தினால் ரூ. 291 கோடி செலவிட மதிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு முன்னால் வெள்ளையர் ஆட்சி காலத்தில் நமது தமிழ் நாட்டிற்கு செலவிடப்பட்ட தொகை எவ்வளவு, இப்பொழுது எவ்வளவு பணம் செலவிடப்பட்டிருக்கிறது என்பதை பார்க்கும்பொழுது, நாம் எந்தக் கட்சியில் இருந்தபோதிலும், எந்த அளவுக்கு அரசாங்கத்தை குறை கூறக்கூடிய அளவுக்கு இருந்தபோதிலும், மனதானது குறை கூறுவதற்கு இடம் தராது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். அப்படி குறை கூறவேண்டுமென்றால், மனச்சாட்சிக்கு விரோதமாக வெளிப்படையாக பேச்சு அளவிற்கு குறை கூறிக்கொண்டிருக்கலாமே ஒழிய, சரியான முறையில் குறைகூற முடியாது. வடநாடு, தென்னாடு என்று பேசுவதற்கே இடமில்லை. இன்றைக்கு நமது ராஜ்யத்திற்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது மூன்றாவது திட்டத்திற்காக. இன்னும்கூட அதிகமாக பல கோடி ரூபாய்கள் கேட்டு செலவு செய்ய அரசாங்கம் தயாராக இருக்கிறது. ஏழை பணக்காரர்கள்

20th January 1961] [Sri M. P. Periasami]

என்ற வித்தியாசம் இல்லாமல், ஜாதிமத வித்தியாசமில்லாமல், தாழ்ந்தவர், உயர்ந்தவர் என்ற வித்தியாசம் இல்லாமல் முதல் அமைச்சர் கனம் காமராஜ், சம்பந்தப்பட்ட மற்ற அமைச்சர்கள், மற்றும் எங்களைப்போன்ற அங்கத்தினர்கள் நல்ல எண்ணத்தோடு திட்டங்கள் தீட்டும்போது, குறை கூறுவதற்கு எந்தவிதமான இடமும் இல்லை. அந்த நிலையில் பார்த்தால், அரசாங்கம் வகுத்துக்கொண்டிருக்கிற திட்டங்களை கவனித்தால் எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் அவர்கள் விளக்கிக் கூறியபடி நெய்வேலி போன்ற திட்டங்கள் பல லட்சக்கணக்கான ரூபாய் செலவிடப்பட்டு நிறைவேற்றப்பட்டுக்கொண்டு வருகின்றன. அதற்கு முன்னால் நெய்வேலி திட்டம் வராது என்று சில பேர்கள் எதிர்பார்த்தார்கள். எதிர்க்கட்சிக்காரர்கள் அம்மாதிரி திட்டங்கள் வராது என்று பேசி மக்களை மயக்கிவிடலாம் என்று நினைத்தார்கள். ஆனால் அந்தத் திட்டம் வந்துவிட்டது. இப்படி ஒவ்வொரு திட்டத்தைப் பற்றியும் குறை கூறிக்கொண்டிருந்தால், அது 'பைல்' ஆகும், 'பைல்' ஆனால் அதை மக்களிடத்தில் எடுத்துச் சொல்லுவதற்கு இடம் இருக்கும் என்று நினைத்தார்கள். அதற்கு இடம் இல்லை. இம்மாதிரி பல விஷயங்களிலே நமது அரசாங்கம் முன்னேறிக் கொண்டு வருகிறது.

நமது சென்னை மாகாணத்தில் ஓடிக்கொண்டிருக்கிற பெரிய நதிகள் எல்லாவற்றிலும் அணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. சிறு சிறு ஓடைகள் தான் பாக்கி இருக்கின்றன. வரண்ட ஆறுகளில் கூட தண்ணீரை தேக்குவதற்கு வசதியாக அணைகள் கட்டப்பட்டு விட்டன. இனிமேல் அணைகள் கட்டுவதற்கு இடமே இல்லை. அம்மாதிரி ஆறுகள் இருந்தாலும் இன்னும் பல கோடி ரூபாய் அளவில் திட்டங்கள் கொடுப்பதற்கு அரசாங்கத்திற்கு இடம் இருக்கும். அம்மாதிரி நாம் இன்னும் பல கோடி ரூபாய் கேட்பதற்கு நாம் தகுந்த முறையில் திட்டங்கள் தயாரித்துக் கொடுத்தால்தான், செலவிற்கு இத்தனை கோடி ரூபாய் வேண்டும் என்று கேட்பதற்கு முடியும். சில இடங்களில் கிராம மக்கள் மத்தியில், பல கோடி ரூபாய் வாங்கி திட்டத்திற்காக செலவு செய்ய திறமை இல்லாதவர்கள் என்றெல்லாம் பேசுகிறார்கள். ஆனால் கவர்னர் அவர்களுடைய உரையை பார்க்கும்பொழுது, எவ்வளவோ அதிகமாக தொகையை வாங்கி நம் அரசாங்கம் செலவு செய்ய தயாராக இருக்கிறது என்பது தெரியவரும். பல கோடி ரூபாய் செலவில் வாங்க வேண்டும். செலவு செய்யக்கூடாத காரியங்களுக்கு செலவு போட இடத்தை வைத்துக்கொண்டுதான் பல கோடி ரூபாய் திட்டங்கள் தயாரிக்கவேண்டுமானால், நமது மாகாணத்தில் அம்மாதிரி திட்டங்கள் போடுவதற்கு இடம் இருக்கவேண்டும். திட்டம் போட இடத்தை வைத்துக்கொண்டுதான் பல கோடி ரூபாய் வாங்கவேண்டும். செலவு செய்யக்கூடாத காரியங்களுக்கு செலவு செய்ய முடியுமா என்பதைத்தான் மற்றவர்கள் யோசிக்க வேண்டும். செலவிற்கு தகுந்தாற்போன்று அணை முதலியவைகளைக் கட்டுவதற்கு திட்டங்கள் இருக்கவேண்டும். ஆனால் நம் ராஜ்யத்தில் சிறிய ஓடைகள்தான் இருக்கின்றன. அம்மாதிரி

[Sri M. P. Periasami] [20th January 1961

சிறிய ஓடைகளிலும் பயன் அளிக்கக்கூடிய திட்டங்கள் இருந்தால், அரசாங்கம் அதற்காக செலவு செய்வதற்கு தயாராக இருக்கிறது. இம்மாதிரி திட்டங்களை போட்டதற்காக அரசாங்கத்தைப் போற்றுகிறோம்.

ஹரிஜன மக்களுக்கு பல கோடி ரூபாய் செலவிடப்பட்டு வருகிறது. 1937-ம் வருஷம் வெள்ளைக்காரர்கள் ஆட்சியில் 4 மாகாணங்கள் இருந்த காலத்திலும்கூட, ஹரிஜனங்களுக்காக சுமார் ரூ. 3, 4 லட்சம்தான் செலவழிக்கப்பட்டு வந்தது. இப்பொழுது 3 மாகாணங்கள் பிரிக்கப்பட்ட பிறகுகூட, தமிழ் நாடு தனியாக இருக்கும் சமயத்தில் 2 கோடி ரூபாய் செலவு செய்யப் படுகிறது. இதனால் பல வழிகளில் ஹரிஜனங்கள் முன்னேற்றம் அடைவதற்கு ரொம்பவும் வசதியாக இருக்கிறது. அதற்கு முன்னால் பெரிய உத்தியோகங்களை எடுத்துக்கொண்டால், ஹரிஜன மக்களுக்கு அதிகமாக அந்த உத்தியோகங்கள் கிடைக்காது. இப்பொழுது பெரிய உத்தியோகங்களில், கெஜட்டட் ஆபிசர்களாகவும், செக்ரடரிகளாகவும் ஹரிஜனங்களாகப் பிறந்தவர்கள் இருக்கிறார்கள். எம்.ஏ. பி.ஏ., ஐ.ஏ.எஸ். பாஸ் செய்யக்கூடிய அளவிற்கு ஹரிஜனங்களுக்கு அரசாங்கம் உதவி செய்கிறார்கள். இந்த உதவியினால் பல ஹரிஜனங்கள் முன்னேறி வருகிறார்கள். ஹரிஜன முன்னேற்றத்திற்காக அரசாங்கம் பல சட்டங்களை போட்டிருக்கிறார்கள். தீண்டாமை சட்டம் போடப்பட்டிருக்கிறது. இந்த சமூகம் எத்தனையோ வழிகளில் முன்னேற்றமடைய அரசாங்கம் ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டு என்று தனியாக ஒரு டிபார்ட்மெண்டு ஏற்படுத்தி, கலெக்டர் மூலமாகவும் இன்னும் பல வழிகளிலும் ஹரிஜனங்களுக்கு உதவி செய்துகொண்டு வருகிறார்கள். இதற்காக அரசாங்கத்தை நாங்கள் போற்றவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். இருந்தபோதிலும், இன்னும் தீண்டாமை சட்டம் சில கிராமங்களில் சரிவர அமுல் நடத்தப்படாமல் இருக்கிறது. அதையும் அரசாங்கம் நிவாரணம் செய்யவேண்டும்.

மழை பெய்து, புயல் அடித்து வீடுகள், கால் நடைகள் இவைகளை அடித்துக்கொண்டு போகக்கூடிய அளவுக்கு வெள்ளம் வந்திருந்தாலும், நாமக்கல், ராசிபுரம், திருச்செங்கோடு தாலுகாக்களில் கிணறுகளில் அடிவெட்டு வெட்டுவது ஆச்சரியமாக இருக்கும். கனம் மின்சார அமைச்சர் அவர்களை நேராக கிணறு வெட்டப்படும்பொழுது அழைத்துக்கொண்டு போய் காண்பித்திருக்கிறோம். அங்கெல்லாம் மின்சார வசதி செய்து கொடுப்பதற்கு கனம் அமைச்சர் ராமய்யா அவர்கள் வேண்டிய உதவி செய்து கொண்டு வருகிறார்கள். மேற்கண்ட இடங்களில் ஸ்பெஷலாக மின்சாரம் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அப்பேற்பட்ட இடங்களில் கிணறுகளெல்லாம் அடிவெட்டு வெட்ட வேண்டிய அளவுக்கு இருக்கிறது. இன்னும் ஹரிஜனங்களுக்கு குடிதண்ணீர் வசதி எல்லா இடங்களிலும் வழங்கப்படவேண்டும். பல பணிகளுக்காக செலவு செய்யக்கூடிய தொகையை ஜில்லா வாரியாக ஒதுக்காமல், எந்தப் பகுதிகளிலே குடிதண்ணீர்

20th January 1961] [Sri M. P. Periasami]

கஷ்டம் அதிகமாக இருக்கிறதோ அந்தப் பகுதிகளுக்கு அதிகமாக பணத்தைக் கொடுத்து, ஆவன செய்தால் மிகவும் நலனுக இருக்கும் என்று சொல்லி முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri T. IRUSAPPAN :** கனம் உதவி சட்டமன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்கள் ஆற்றிய உரைமீது, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக, ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவர்கள் உரையில், மழையினல் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் அளித்து, அவர்களுடைய குறைகளைப் போக்கியிருப்பதாக குறிப்பிட்டிருக்கிருர்கள். வழக்கம்போல் கண் துடைப்பு வேலைதான் செய்யப்பட்டதே ஒழிய பாதிக்கப்பட்டவர்களுக்கு போதுமான நிவாரணம் அளிக்கப்படவில்லை. தீயினல் பாதிக்கப்பட்டாலும், மழையினல் பாதிக்கப்பட்டாலும், வெள்ளத்தினல் பாதிக்கப்பட்டாலும், 30 ரூபாய்தான் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் நிர்ணயித்துள்ளனர். அதைத்தான் இப்பொழுதும் கொடுத்திருக்கிருர்கள். அதிகப்படியாக ஒன்றும் கொடுத்துவிடவில்லை. இம்மாதிரி பாதிக்கப்பட்டவர்களுக்கு வீடு கட்டிக்கொள்வதற்காக ரூ. 300 ஆவது கொடுக்கவேண்டும். ஏழை எளிய மக்களும், இந்த நாட்டிலே பிறந்த பழங்குடி மக்களாகிய ஆதித் திராவிட சமுதாயமும் அதிகமாக பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே 300 ரூபாய் கொடுத்தால் ஆதி திராவிட மக்கள் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு வசதி ஏற்படும். ஆகவே சட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்திற்கு அடுத்தபடியாக நமது நாட்டிலே பெரும் அளவில் நடப்பது கைத்தறித் தொழில். கைத்தறி நெசவாளர்களுடைய கஷ்டங்கள் இன்னும் தீர்க்கப்படவில்லை. அப்படியிருக்கின்ற நேரத்திலே, இன்றைய தினம் விசைத் தறிகளைப் புகுத்தி, மில்களின் மூலம் துணிகளை உற்பத்தி செய்வதுபோல விசைத் தறிகளின் மூலம் உற்பத்தி செய்வதால், கைத்தறியாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிருர்கள். விசைத் தறியினல் எந்த அளவுக்கு அவர்களுக்கு பாதகம் ஏற்பட்டிருக்கிறது என்பதை சர்க்கார் பரிசீலனை செய்யவேண்டும்.

விவசாயத்தில் அதிகப்படியான ஊக்கமும், ஆக்கமும் காட்டப்படுகிறது என்று குறிப்பிட்டிருக்கிருர்கள். விவசாயம் செய்பவர்களுக்கு தேவையானபொழுது கடன்கள் கிடைப்பதில்லை என்பதை ஆளும் கட்சியிலுள்ளவர்களும், எதிர்க்கட்சியிலுள்ளவர்களும் பரவலாகச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிருர்கள். விவசாயத்திற்குத் தேவையான உர வகைகளும் தகுந்த காலத்தில் கிடைப்பதில்லை என்ற அவல நிலைமையும் ஏற்பட்டுள்ளது. சர்க்கார் நிர்ணயித்திருக்கும் நியாயமான விலைக்கு விவசாயிகளுக்கு உரங்கள் கிடைப்பதில்லை. கள்ள மார்க்கெட்டில்தான் உரம் கிடைக்கிறது. இந்தக் குற்றச்சாட்டு நீண்டகாலமாக சொல்லப்பட்டு வருகிறது. தக்காவிக் கடன்களும் ஏழை விவசாயிகளுக்கு அந்தந்தக் காலத்தில் அவர்கள் மனுச் செய்துகொள்ளும்பொழுது கிடைக்கச் செய்வது சர்க்காரின் கடமை.

[Sri T. Irusappan] [20th January 1961

மின் வேகத்திலே மின்சாரம் நம்முடைய தமிழகத்திலே பரவி வருகிறது என்று சொல்லுகிறார்கள். ஒரு ஆண்டுக்கு முன்பாக ஒப்பந்தம் செய்துகொண்டு, பம்பு செட்டுகளை அமைத்தும் இருக்கிற ஏழை விவசாயிகளுக்கு இன்னும் தண்ணீர் இறைப்பதற்கு கொடுக்கப்படவில்லை. மோட்டார் வாங்கிவிட்டால் உடனே தண்ணீர் இறைப்பதற்கு அனுமதி கொடுத்துவிடுகிறோம் என்று சொல்லுகிறார்கள். மோட்டார் வாங்கிய விவசாயிகளுக்கும் அனுமதி கொடுப்பதில்லை. இதற்கு உண்மையான காரணம் என்ன என்று தெரியவில்லை.

ஆதித் திராவிட சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காக என்னென்ன செய்யப்போகிறார்கள் என்று சொல்லப்படவில்லை. எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர், ஆதித் திராவிட சமுதாயத்திற்கு சர்க்கார் பல நன்மைகளைச் செய்திருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். ஆதித் திராவிட சமுதாயத்திற்கு நன்மைகளைச் செய்யத் தவறிய காரணத்தினால்தான், குற்றம் குறைகள் சொல்ல வேண்டியிருக்கிறது. அவர்கள் வசிக்கும் பகுதிகளுக்கு மின்சார விளக்குகள் அமைத்துக் கொடுக்கப்படுமென்று உறுதிமொழி அளிக்கப்பட்டது. ஆத்தூர் வட்டாரத்தில், ஊராட்சி மன்றங்கள் தீர்மானங்கள் போட்டும்கூட, பல சேரிகளிலே இன்னும் விளக்குகள் அமைத்துக் கொடுக்கப்படவில்லை. இதைப் பரிசிலனை செய்து எந்தச் சேரிகளிலே விளக்குகள் போடவில்லையோ, அந்தச் சேரிகளுக்கு மின்சார விளக்குகள் அமைத்துக் கொடுக்க வேண்டியது சர்க்கார் கடமை.

அடுத்தபடியாக, ஆதித் திராவிடர்கள் குடியிருப்பதற்கு இடம் இல்லை என்ற அவல நிலை இருக்கிறது. உழுவதற்கு நிலம் இல்லாவிட்டாலும்கூட, தாழ்த்தப்பட்ட மக்கள் இருக்கிற பகுதிகளிலே, அவர்களுக்கு மனைகளைச் சொந்தப்படுத்திக் கொடுப்பதற்கு சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னர் பெருமான் எப்பொழுதும் வழக்கமாகச் சொல்வது போல்தான் இந்த உரையும் அமைந்திருக்கிறது, மக்களுக்கு எந்த விதமான நன்மையும் கிடைக்கக்கூடிய அளவிலே இந்த உரை அமையவில்லை என்று சொல்லிக்கொண்டு, மேலே நான் சொல்லியிருக்கும் குறைகளை சர்க்கார் உடனே கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI A. MARIAPPAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையைப் பாராட்டி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். தூத்துக்குடி ஆழ்கடல் திட்டத்தையும், நமது மாகாணத்திற்கு இரும்புத் தொழிற்சாலையையும் சேர்த்து இருப்பதை நான் பாராட்டுகிறேன்.

நம்முடைய மாகாணத்திலே கைத்தறி நெசவாளர்கள் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள். அவர்களுக்கு சிறிய அளவிலாவது உதவி செய்வது சர்க்கார் கடமை. இரண்டாவது திட்டத்திலே

20th January 1961] [Sri A. Mariappan]

31 கோடி ரூபாய் வரையிலும் செலவழித்திருக்கிறார்கள். மூன்றாவது திட்டத்திலே 35 கோடி ரூபாய்தான் ஒதுக்கியிருக்கிறார்கள். மாகாண சர்க்கார் தலையிட்டு, கைத்தறியாளர்களின் நிவாரணத்திற்காக 150 கோடி ரூபாய் ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கைத்தறி நெசவுத் தொழிலைப் பொறுத்தவரையில் மத்திய சர்க்கார் நியமித்த "ஸ்டடி குரூப்" 140 கோடி ரூபாய் செலவழிக்கவேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறது. ஆகவே மத்திய சர்க்காரை மாகாண சர்க்கார் வற்புறுத்தி கைத்தறி நெசவாளர்களுக்கு ரூபாய் 150 கோடி ஒதுக்கவேண்டும். நம்முடைய மாகாணத்தை பொறுத்தவரையில், கைத்தறி நெசவாளர்களுக்காக மூன்றாவது திட்டத்தில் என்னென்ன காரியங்கள் செய்யவேண்டுமென்று திட்டமிடப்பட்டுள்ளது. ஏற்கனவே நிர்ணயித்த திட்டத்திலே எந்த ஒரு பகுதியையும் குறைக்காமல், அப்படியே அந்தத் திட்டத்தைச் சேர்க்கவேண்டுமென்று நம்முடைய சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக சேலம் நகரத்திற்கு குடி தண்ணீர் மிகவும் இன்றியமையாதது. அந்த நகரத்திற்கு குடி தண்ணீர் திட்டத்திற்காக மூன்றாவது திட்டத்திலே பி-பிரிவின் கீழ் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதை ஏ-பிரிவுக்கு மாற்றினால்தான் சேலத்தைப் பொறுத்தவரையில் குடி தண்ணீர் வசதி பெற முடியும். அதே மாதிரி, மத்திய சர்க்கார் ஏற்பாடு செய்யவிருக்கும் ரீஜனல் என்ஜினியரிங் காலேஜையும், சேலம் ஜில்லாவில் ஏற்படுத்த வேண்டும் என்று மாகாண சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

சேலம்-பங்களூர் ரயில்வே லைன் முக்கியமானது. நெய்வேலி பழுப்பு நிலக்கரியை மைசூர் போன்ற பகுதிகளுக்கு அனுப்பவும் இந்த சேலம்-பங்களூர் ரயில்வே லைன் மிக அவசியமானது. ஆகவே, அதற்கு முதல் பிரையாரிடி கொடுத்திருக்கிறார்கள். அதற்காக சர்க்காரைப் பாராட்டுவதோடு, அதைச் சீக்கிரமாகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். 1-00 p.m.

சேலம் நகரத்தைப் பொறுத்தவரையில், அங்கு ரயில்வே க்ராஸிங் அதாவது மேம்பாலம் கிடையாது. பல இடங்களில் ரெயில்வே க்ராஸிங்கள் இருந்தாலும், சேலம் நகரத்தில் அம்மாதிரி பாலம் இல்லாததால், மக்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். ஆகவே, சேலம் நகரத்தில் மேம்பாலம் கட்டித்தர முதல் இடம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

தவிரவும் சேலம் ஜில்லாவில் அதிகமான கைத்தறி நெசவாளர்கள் இருக்கிறார்கள், அதனால் அதிகமாகக் கதிரிகள் ஒதுக்க வேண்டும் என்று கேட்டு இருந்தோம். அங்கே ஒரு கோஆபரேடிவ் கைத்தறி நூற்பாலை வரும் என்றிருக்கிறார்கள். ஒரு ஆலை போதாது. சேலம் ஜில்லாவிற்கு குறைந்தது ஒரு லட்சம் கதிர்கள் மூன்றாவது திட்டத்திலேயே ஒதுக்க வேண்டும் என்றும், அதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்றும், மாகாண

சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம். சேலம் ஜில்லா, மாகாணத்திலேயே அதிகமான கைத்தரியாளர்களைக் கொண்டது. அங்கே சுமார் ஒன்றரை லட்சம் மக்கள் கைத்தரியையே நம்பி வாழ்ந்து வருகிறார்கள். நம் மாகாணத்தில் மூன்றில் ஒரு பங்கு சேலம் ஜில்லாவில் இருக்கிறார்கள். ஆகவே, சேலம் ஜில்லாவிற்கு அதிகப்படியான கதிர்களை ஒதுக்க தக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று மாகாண சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம். அதற்கான முயற்சிகளை மாகாணச் சர்க்கார் செய்ய வேண்டும்.

சென்னை நகரத்தில், நகர சபைக்கு, ரோடு வசதிக்காக, சர்க்கார் பண உதவி செய்திருக்கிறார்கள். அதே மாதிரி, சேலம் நகரத்து ரோடுகள் மிக மோசமான நிலையில் இருக்கின்றன. அந்த நகர சபைக்கும், ரோடுகளைச் செப்பனிடுவதற்கு, நம் மாகாண சர்க்கார், கடனாகவும், மானியமாகவும், குறைந்த பட்சம் ஒரு லட்ச ரூபாயாவது கொடுத்து, அந்த நகரத்து ரோடுகளை நல்ல முறையிலே வைக்க சர்க்கார் உதவியளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

சேலத்தில் திருமணி முத்தார் என்று ஒரு நதி ஓடுகிறது. அது வெறும் சாக்கடையாக ஓடுகிறது. அப்படி அந்த நதி சாக்கடையாக ஓடுவதால், அது சுகாதாரத்திற்குக் கேடாக இருக்கிறது. ஆகவே, அங்கு தேங்கி யிருக்கும் சுகாதாரக் கேடாக இருக்கும் ஜலத்தை வெளியில் போகச்செய்ய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஆகவே, இந்த விஷயத்தில் மாகாண சர்க்கார் வழிவகை செய்து, இந்த திருமணி முத்தார் நதிக்கு ஒரு திட்டம் போட்டாக வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

சேலம் ஜில்லா மாகாணத்திலேயே பெரிய ஜில்லாவாக இருந்தும், அங்கு ஒரு தலைமை ஆஸ்பத்திரி நல்லதாகக் கிடையாது. தாலுக்காவிலிருக்கும் ஆஸ்பத்திரியே தான் அங்கு நடக்கிறது. மற்றைய ஜில்லாக்களை எடுத்துக் கொண்டால், நல்ல முறையிலே நடக்கும் தலைமை ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன. அதற்காக மாகாண சர்க்காரைப் பாராட்டுகிறோம். அதே நேரத்திலே, சேலத்திலும், ஒரு பெரிய தலைமை ஆஸ்பத்திரியை, சிறந்த முறையிலே அமைத்துக் கொடுக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

இரும்புத் தொழிற்சாலையைப் பொறுத்த வரையில், ரூ. 75 லட்சம் செலவில் பூர்வாங்க வேலைகள் நடக்கின்றன. அதற்காக ஒரு ஸ்பெஷல் அதிகாரியையும் நியமித்து அந்த வேலைகளைச் செய்து வருவதற்கு மாகாண சர்க்காரைப் பாராட்டுகிறேன். அதே நேரத்தில், இன்னும் அந்த வேலையைத் துரிதமாகச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

பருவ மழையைப் பொறுத்த வரை, மற்றப் பகுதிகளில் அதிக மழையினால் கெடுதல்கள் கூட விளைந்திருக்கும் போது, எங்கள் சேலம் ஜில்லாவில், ஒரே ஒரு தாலுக்காவைத் தவிர, இந்த ஐப்பசி, கார்த்திகை மாதத்தில் கூட குடி தண்ணீரும் இல்லாமல் மக்கள்

20th January 1961] [Sri A. Mariappan]

கஷ்டப் படுகிறார்கள். ஆகவே, அங்கு வேண்டிய பாசன வசதி, குடி தண்ணீர் வசதி இவைகளைப் பெருக்கியமைத்துத் தர வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம.

நியாய விலைக் கடைகளை ஏற்படுத்தியிருப்பதற்கு சர்க்காரைப் பாராட்டுகிறேன். சேலம் நகரத்தில் 22 கடைகளை திறந்திருப் பதற்காகவும் சர்க்காரைப் பாராட்டுகிறேன். ஆனால் இவை சேலம் ஜில்லாவிற்குப் போதாது. சேலம் நகரத்தில் மட்டும் குறைந்தது 40 கடைகளாவது திறந்தால் தான், கைத்தறி நெசவாளர்களும், மற்றவர்களும், குறைந்த விலையில் உணவுப் பொருள் களை வாங்க வசதியாக இருக்கும். அப்படி அதிகப்படியான நியாய விலைக் கடைகளை திறக்க ஏற்ற நடவடிக்கைகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

மின்சார உற்பத்திக்காக ரூ. 100 கோடி ஒதுக்கியிருக்கிறார்கள். அதற்காக சர்க்காரைப் பாராட்டுகிறேன். ஆனால், எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரையில், அங்கு மின்சார சப்ளை சேலம்-ஈரோடு எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியாரிடம் இருக்கிறது. ஆகவே, விஸ்தரிப்பதில் குறைகள் இருக்கின்றன. குறிப்பாக சேலம் நகரத்தில், அவர்கள் இருப்பதால், அவர்கள் மின்சாரத்தை விஸ்தரிப்பதில்லை. மின்சார வசதிகளைப் பெருக்க வேண்டும் என்றால், அவர்கள் தங்களுக்கு பணம் வேண்டும் என்கிறார்கள். ஆனால், சர்க்காரைக் கேட்டால், பணம் கொடுத்தாலும், அவர்கள் விஸ்தரிக்கத் தயாராக இல்லை என்று சொல்லுகிறார்கள். ஆகவே, சீக்கிரமாகவே எங்களுக்கு மின்சார வசதி அளிக்க மாகாண சர்க்கார் முற்படவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம். இது சம்பந்தமாக சேலம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்த முதல் அமைச்சரவர்களிடமும், மின்சார அமைச்சரவர்களிடமும் முறையிட்டிருக்கிறார்கள். ஆகவே, பின் தங்கிய ஜில்லாவாக இருக்கும், எங்கள் ஜில்லாவிற்கு மின்சார வசதி நல்ல முறையில் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று மாகாண சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

அதோடு கூட, குழந்தைகள் படிப்புக்காக, 6 வயது முதல் 11 வயது வரை இலவசப் படிப்புக்கு ஏற்பாடு செய்திருப்பதாகச் சர்க்காரைப் பாராட்டுகிறோம். மதிய உணவுக்கு ஏற்பாடு செய் திருப்பதற்காகவும் பாராட்டுகிறோம். இதோடு கூட, நெய்வேலியில், 35 லட்சம் டன்னிலிருந்து, 45 லட்சம் டன் வரை உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்திருப்பதையும் பாராட்டுகிறோம். அதே நோக்கில் பின் தங்கிய வகுப்பினர்களுக்கு ஸ்காலர் ஷிப் வசதிகளை அதிகப் படுத்தித் தரவேண்டும். இப்பொழுது ஒதுக்கி யிருப்பது போதாது. இப்பொழுதுதான் பின்தங்கிய ஏழை மக்கள் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிகளுக்கு அனுப்ப ஆரம்பித்திருக்கிறார்கள். ஆகவே, அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்க அதிகப் பணத்தை ஒதுக்கி, உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

கைத்தறியாளர்களுக்கு, கச்சாப் பொருள்கள் வாங்குவதிலும் உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம். நார் பட்டு போன்ற கச்சாப் பொருள்கள், வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. அப்படிக் குறைவாக இருப்பதால், ரூ. 5-க்கு வாங்க வேண்டிய நார் பட்டுப் பொருளை, ரூ. 11-க்கும் அதிகமாகக் கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. கைத்தறி நெசவாளர்களுக்கு உதவிகள் செய்தாலும், இன்னொரு புறம், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருப்பதால் அவதிப்படுகிறார்கள், கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, நார் பட்டைப் பொறுத்த வரையில், இன்னும் அதிகமாக இறக்குமதி செய்ய மாகாண சர்க்கார், மத்திய சர்க்காரிடம் வலியுறுத்தி, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று குறிப்பிடுகிறோம்.

சேலம் ஜில்லா ஏனைய ஜில்லாக்களைவிட, பின் தங்கிய பிராந்தியம். அங்கு ஒரே ஒரு கல்லூரியும், ஒரே ஒரு பாலிடெக்னிக்கும் தான் இருக்கின்றன, அதுவும் தனியார் முயற்சியால். ஆகவே, அந்த மக்கள் மற்ற இடங்களுக்கு தங்கள் பிள்ளைகளை அனுப்ப வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, அந்த ஜில்லாவில், மேற்கொண்டு ஒரு கல்லூரியையும், இன்னொரு பாலிடெக்னிக்கையும் நிறுவ வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறோம். அதற்கு முதல் பிரையாரிடி கொடுத்து உடனடியாக ஏற்படுத்த வேண்டும் என்றும் வலியுறுத்துகிறோம்.

ஆகவே, இந்தக் காரியங்களில், நம் மாகாண சர்க்கார் மத்திய சர்க்காரோடு அதிகமாகச் சொல்லி, நமக்கு வேண்டிய திட்டங்களை பெற்றிருப்பதுபோல், அதற்காக மாகாண சர்க்காரைப் பாராட்டுகிறோம், மற்ற திட்டங்களையும் பெறவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம். நெய்வேலி முதலிய திட்டங்களை நமக்கு வாங்கிக் கொண்டதற்காக மாகாண சர்க்காரைப் பாராட்டி என் வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI K. R. VISWANATHAN : கனம் உதவி அவைத் தலைவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் இந்தத் தீர்மானத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் பெருமான் அவர்கள் இந்த ஆண்டு ஆற்றிய உரை மிகவும் சுருக்கமாக, எல்லாப் பொருள்களும் பொதிந்ததாக இருப்பது பற்றி நான் மகிழ்ச்சியடைகின்றேன்.

கவர்னர் ஆற்றிய உரையில் மிக முக்கியமாக எடுத்துக்காட்டப்படுவது ஐந்தாண்டுத் திட்ட நடைமுறையாகும். அதிலே விவசாயத்தைப்பற்றியும், கைத்தொழிலைப் பற்றியும், கல்வியைப் பற்றியும் இம்மாதிரி பல முக்கிய பொருள்களைப் பற்றியெல்லாம் எடுத்துப் பேசியிருக்கிறார்கள். அப்படியிருக்க, சில கனம் உறுப்பினர்கள், கவர்னர் பெருமான் உரையானது மிகவும் ஏமாற்றத்தைத் தருவதாகக் குறை கூறுகிறார்கள் என்றால், அவர்கள் எதை எதிர்ப்பார்த்திருந்தார்கள், எப்படி ஏமாற்றத்தை இந்த உரை தருகிறது என்பது

20th January 1961] [Sri K. R. Viswanathan]

எனக்கு விளங்கவில்லை. அவர்கள் எதிர்பார்த்ததையெல்லாம் எழுதிக்கொண்டே போவதானால், கவர்னர் பெருமான் உரைக்கு இடமே இருக்க முடியாது. எல்லாவற்றையும் எழுதினாலுங்கூட, கடைசியில் குறை இருந்துகொண்டே இருக்கும் என்பதை எடுத்துக்காட்டவேண்டிய அவசியம் இருக்கிறது.

அது கிடக்க, இங்கு நான் எடுத்துக் கூற முற்படுவது விவசாயம் ஆகும். நம்முடைய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முதலீடாகிய 291 கோடி ரூபாயில் 80 கோடி ரூபாய் வரைக்கும் விவசாயத்திலே தான் செலவிடவேண்டுமென்று நம்முடைய அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. நம்முடைய மாகாணத்தில் எல்லா ஆறுகளும், எல்லா ஓடைகளும் பெரும்பாலும் கட்டப்பட்டுவிட்டன, இனிமேல் நீர்ப்பாசனத் திட்டங்களே வேண்டியதில்லை என்ற நிலைமையை உண்டாக்கவேண்டும். அம்மாதிரி ஓரளவுக்கு நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்று வைத்துக்கொண்டாலுங்கூட, பெரிய நீர்ப்பாசனத் திட்டத்திற்காக 27 கோடி ரூபாயும், சிறிய பாசனத் திட்டத்திற்காக 8 கோடி ரூபாயும், மற்ற சிறு ஏரிகளைக் கட்ட சில கோடி ரூபாய்களும் ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் வரவேற்கத் தகுந்ததாகும்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முதலீடானது முன்பு 399 கோடி ரூபாய் என்று சொல்லி, இப்பொழுது 291 கோடி ரூபாய் வரைக்கும் நாம் செலவிடலாம் என்று திட்டக் கமிஷன் நமக்கு அனுமதி அளித்துள்ளது. அம்மாதிரி முதலீட்டைக் குறைத்த சந்தர்ப்பத்தை எதிர்க்கட்சிக்காரர்கள் எதிர்ப் பிரசாரம் செய்வதற்காகப் பயன்படுத்துகிறார்கள். "சென்னை அரசாங்கம் காவடி எடுத்துச் சென்றார்கள், முதலீட்டை அவர்கள் குறைத்து விட்டார்கள், மத்திய அரசாங்கத்தினுடைய உதவி மிகவும் குறைந்துவிடப் போகிறது, நம்முடைய திட்டங்களெல்லாம் நிறைவேறுவதற்கு வழி இல்லை" என்ற முறையிலே ஒரு எதிர்ப் பிரசாரம் செய்து கொண்டு வருகிறார்கள். அதற்குத் தக்க பதில் நம்முடைய கவர்னர் பெருமான் உரையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 150 கோடி என்று திட்டமிட்டிருந்தாலும், எப்படி 182 வரைக்கும் நாம் செலவிட முடிந்ததோ, அதே போல், இப்பொழுது 291 கோடி முதலீடாக இருந்தாலும், அதை 350 முதல் 400 கோடி வரைக்கும் உயர்த்திச் செலவிடக் கூடிய சக்தியும் வாய்ப்பும் கிடைக்க இடம் இருக்கிறது என்று கூறியிருப்பது பற்றி நாம் எல்லாம் மகிழ்ச்சி அடையவேண்டியிருக்கிறது.

நீர்ப்பாசனத் திட்டத்தை எடுத்துக் கொண்டால், பரம்பிக்குளம் திட்டம் நம்முடைய மாகாணத்திற்கு மிகவும் இன்றியமையாதது என்ற முறையில் அதற்கு முதல் இடம் கொடுத்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே அது முக்கியமாக முடிக்கப்படும் என்ற நிச்சயத்தை, உறுதியைக் கொடுத்திருக்கிறார்கள். அதற்கு அடுத்தபடியாக, நடுத்தரத் திட்டங்களாக நிறைவேற்றப்படும் என்று கூறப்பட்டிருக்கிறது. இங்கு ஒரு வேண்டுகோளை

[Sri K. R. Viswanathan] [20th January 1961

மட்டும் அரசாங்கத்திற்கு நான் விடுத்துக்கொள்ள விரும்புகிறேன். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றி விவாதித்தபோது, முக்கிய மாக மூன்று நடுத்தரத் திட்டங்கள் முதல் இடம் பெறும் என்று சொல்லியிருந்தார்கள். மருதையாறு திட்டம், நொய்யல் திட்டம், கொடவனுறு திட்டம் ஆகிய மூன்றில், மருதையாறு திட்டம் பற்றிக் குறிப்பிடுகின்றேன். திருச்சி மாவட்டத்திலே உடையார் பாளையம் வட்டம் மிகவும் வரண்ட பிரதேசமாக உள்ளது. கொள்ளிடத்தில் வரும் வெள்ள நீரை, இரண்டு இடங்களில் தடுத்து, பெரிய ஏரிகளாகக் கட்டினுல், அதன் மூலம் முப்பதாயிரம் ஏக்கராக்கள் பாசன வசதி அளிக்கக்கூடிய திட்டம்தான் மருதை யாறு திட்டம் என்பது. அந்தத் திட்டம் சர்க்காருடைய கையில் முதல் இடம் பெறவேண்டும். 1961-ம் ஆண்டு ஏப்ரல் மாதத் திலேயே வேலைகள் துவங்கவேண்டுமென்று அவர்கள் முடிவு செய்திருந்தார்கள். இந்த மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட முதலீடு குறைக்கப்பட்ட காரணத்தால். இந்தத் திட்டம் கைவிடப் படுமோ என்ற சந்தேகம் எங்களிடத்தில் இருக்கிறது என்பதைத் தான் நான் அரசாங்கத்திற்கு எடுத்துக்காட்டிக்கொள்ள ஆசைப் படுகிறேன். வரண்ட பிரதேசத்திற்கு இது ஒரு வரப் பிரசாத மாகும், முப்பதாயிரம் ஏக்கராக்கள், மானவாரி நிலம், நஞ்சை நில மாகிப் பயன்படும்படியான இந்தத் திட்டத்திற்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமென்று எப்படி முன்பு முடிவு செய்தார்களோ, அதை மாற்றுமல், மறுபடியும் அந்தத் திட்டம் முதலிடம் பெற்று, 1961-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலே நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டிய ஏற்பாட்டை அரசாங்கம் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

இன்னும் பல ஏரித் திட்டங்கள் நிறைவேற வேண்டிய அவசியம் இருக்கிறது. நான் இந்த சட்டசபை உறுப்பினராக வந்து, இன்றைக்கு ஒன்பது ஆண்டுகள் ஆகின்றன. இதற்குள் இரண்டு மூன்று திட்டங்களைப்பற்றி அடிக்கடி வலியுறுத்திப் பேசியிருக் கிறேன். அந்தத் திட்டங்கள் இன்னும் நிறைவேறியபாடில்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கின்றேன். நான் பல முறை சொல்லிவந்தது போல், அரசாங்கத்தில் கால தாமதம்தான் இதற்குக் காரணம் ஆகும். திட்டம் பற்றிய விவ ரம் சர்க்காருக்கு வரும். அதைத் தலைமைப் பொறியருக்கு அனுப்புவார்கள். அதை அவர்கள் கலெக்டருக்கு அனுப்பி விடுவார்கள். கலெக்டர் அதைத் தலைமைப் பொறியருக்கு அனுப் பாமல் சர்க்காருக்கே அனுப்பி விடுவார்கள். சர்க்கார் அதைத் தலைமைப் பொறியார் வாயிலாகத்தான் வரவேண்டுமென்று திருப்பி அனுப்பிவிடுவார்கள். இம்மாதிரி ஏழெட்டு ஆண்டுகளாகத் திட்டங்கள் தாமதமாகிக் கொண்டு வருகின்றன. இன்னும் அந்தத் திட்டங்கள் நிறைவேறியபாடில்லை. முக்கியமாக நீர்ப்பாசன அமைச்சர் அவர்கள் இங்கு இருக்கிறபடியினுல், அவருக்குக் குறிப்பாக எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறேன். குழுமூர் ஏரித் திட்டத்தினுல் 350,400 ஏக்கராக்களுக்கும் அதிகமாகப் பாசன

20th January 1961] [Sri K. R. Viswanathan]

வசதி ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. அத்தகைய ஏரித் திட்டத்தைப்பற்றி ஏழெட்டு ஆண்டுகளாக நான் சொல்லிக்கொண்டே இருக்கிறேன். அது இன்னும் நிறைவேற்றப்படவில்லை என்பதை நான் மிகவும் வருத்தத்தோடு சொல்லிக் கொள்கின்றேன். அடுத்தார்போல் செங்கால் ஓடைத் திட்டம். அதன் மூலம் 350 ஏக்கராக்கள் நஞ்சை சாகுபடிக்கு வர ஏது இருக்கிறது. இத்தகைய ஏரித் திட்டங்களையெல்லாம் மிக விரைவில் கொண்டு வந்தால் வரண்ட பிரதேசங்களுக்கு அவை பயன்தரக் தக்கதாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

அடுத்தபடியாக, இம்மாதிரி வரண்ட பிரதேசங்களில் இருக்கும் ஏரிகள், சிறு ஓடைகள் இவைகளைக் கட்டிய பிறகு, தண்ணீர் கிடைக்காத மற்ற பகுதியிலே பூமிக்கு அடியில் தண்ணீர் இருக்கிறதா என்பதைப் பார்த்து நாம் முயலவேண்டிய அவசியம் இருக்கிறது. அம்மாதிரி உடையார்பாளையம் தாலுகாவில் இரண்டு இடங்களில் தன்னூற்றுக் கிணறுகள் இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டு மேற்கொண்டு 50 கிணறுகள் தோண்ட அதற்காகப் பத்து லட்ச ரூபாய் அரசாங்கத்தார் அனுமதித்திருக்கிறார்கள். ஆழக் குழாய்கள் போட்டுப் பார்க்கவேண்டும் என்ற உத்தரவு வந்து ஆறு மாதங்கள் ஆகியும் இன்னும் திட்டம் நடைமுறைக்கு வரவில்லை. தோண்டுவதற்கு வேண்டிய 'பவர் ட்ரில்கள்' நம்முடைய அரசாங்கத்திலே இல்லை என்ற குறைதான். ஏதோ ஒன்றிரண்டு இருப்பதைத் தென்னாற்காடு மாவட்டத்தில் பயன் படுத்திக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும், திருச்சி மாவட்டத்தில் தன்னூற்றுக் கிணறுகள் தோண்ட, அன்னியச் செலாவணி தடையாக இருந்தாலும் அதை மீறி அன்னிய நாட்டிலிருந்து 'பவர் ட்ரில்களை' வரவழைத்து, உபயோகப்படுத்தி வரண்ட பிரதேசங்களில் நீர்ப்பாசன வசதியை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். ஆகையால் உடனடியாக அந்நியச் செலாவணி அதிகமாகப் பெற்று பவர் ட்ரில்கள் எல்லாம் அதிகமாக வரவழைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை மேற்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, விவசாய முன்னேற்றத்திலே முக்கியமாக விவசாயிகளுடைய நிலைமையைக் கவனிக்க வேண்டியது அரசாங்கத்தினுடைய பொறுப்பாகும். அதாவது விவசாயிகளுக்கு அரசாங்கத்தார் பல கடன் உதவிகளை அளித்தார்கள். எரு, விதை வாங்கக் கடன், மாடு வாங்கக் கடன், வண்டி வாங்கக் கடன் என்று பல வகையில் கடன் கொடுத்து உதவுகிறார்கள். அதுமட்டுமல்லாமல் கிணறு வெட்டக் கடன் கொடுக்கிறார்கள். கடன் கொடுப்பது மாத்திரம் அல்லாமல் கிணறு வெட்ட மானியம் 49-50-ம் வருஷத்தில் கொடுத்தார்கள். அத்தகைய உதவியைப் பெற்று அநேக விவசாயிகள் கிணறு வெட்டினார்கள். சிலர் கிணறு வெட்டியபோதிலும் நீர் வராமல் இருந்திருக்கிறது. சிலர் முழுக்க வெட்டாமலும் இருந்திருக்கிறார்கள். இதை அதிகாரிகள் கடைசியில் போய்ப் பார்க்காமலேயே விட்டுவிட்டார்கள். சரியாகக் கிணறு வெட்டப்பட்டிருக்கிறதா என்று பரிசீலனை செய்து வெட்டப்பட்டிருக்கிறது

[Sri K. R. Viswanathan] [20th January 1961

என்று ஒத்துக்கொள்ளப்பட்ட கிணறுகளுக்குக் கொடுத்த மானியம் திருப்பித் தரவேண்டாம். ஆனால் வெட்டப்படவில்லை என்று தெரிந்தால் அந்த மானியம் திருப்பி கடனைப்போல வசூல் செய்ய வேண்டியிருந்தது. அதிகாரிகளே அப்போது பார்த்து சரியான முறையில் முடிவு தெரிவிக்காமல் விட்டுவிட்டார்கள். இப்போது எப்படி ஆகிறது? ஏழெட்டு வருஷங்கள் ஆகிவிட்டது. இப்போது பத்து வருஷக் கடன் என்ற பெயரில் திடீரென்று 500 ரூபாய் பணத்திற்கு 800, 900 ரூபாய் பாக்கி என்று விவசாயிகளுக்கு நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். இதில் தவறு அதிகாரிகள் பேரிலும் இருக்கலாம், குடியானவர்கள் பேரிலும் இருக்கலாம். ஆனால் திடீரென்று இப்படி நோட்டீஸ் கொடுத்து அவர்கள் சொத்துக்களை ஜப்தி செய்யப் போவது என்பது சரியல்ல. குடியானவர்கள் மிகவும் வருந்தி பயப்படுகிறார்கள். இதற்கு நான் தெரிவிக்கிற யோசனை என்னவென்றால் அவர்கள் செலுத்த வேண்டிய தொகையை பத்துத் தவணை, இருபது தவணை என்பதாகப் பிரித்து பல தவணைகளில் அவர்கள் திருப்பித் தர வேண்டும் என்று உத்தரவு போட்டால் அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பித் தந்துவிடுவார்கள். இந்த மாதிரி உத்தரவிட்டால் குடியானவர்களுடைய வாழ்வு மலரும். விவசாயிகளுடைய நலனில் அக்கறை கொண்டு நாம் பல காரியங்களைச் செய்து வருகின்றபோது இப்படிச் செய்யாவிட்டால் அவர்களுக்கு உதவினவர்களாக ஆகமாட்டோம். ஆகவே இதையும் அவசரமாகக் கவனித்து சர்க்கார் குடியானவர்களுக்கு உதவ முன் வருவார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக நம்முடைய அரசாங்கம் பிற்பட்ட வகுப்பார்களுக்கு நல்ல உதவி செய்ய முன்வந்திருப்பதைப் பாராட்டுகிறேன். பிற்பட்ட வகுப்பார்களுக்கு சென்ற ஆண்டு 27 லட்சம் ரூபாய் உதவினார்கள். இந்த ஆண்டு அதிகப்படியாக 12 லட்சம் ரூபாய் ஒதுக்கினார்கள். ஆக 39 லட்சம் ரூபாய் அவர்களுக்காகச் செலவிட்டிருப்பது பாராட்டத்தக்கது. ஆனால் இன்னொரு விஷயம். அடுத்த ஆண்டு மீண்டும் 17 லட்சம் ரூபாய் என்று ஒதுக்கி பாக்கியை அடிஷனல் அலாட்மெண்டு என்று அதிகாரிகள் கோரிப் பெறவேண்டும் என்று செய்யக்கூடாது. இதனால் காலதாமதம் ஆகிறது. அடுத்த வருஷ பட்ஜெட்டிலேயே 39 லட்சம் என்று ஆரம்பத்திலேயே ஒதுக்கிவிட்டால் 'ஸ்காலர்ஷிப்' பெறுவதில் காலதாமதம் இருக்காது. மாணவர்களுக்கும் சிரமம் இராது. எப்படியோ அதிகாரிகள் இவ்வாண்டு புகார்கள் வருவதற்கு இடமின்றி, எவ்வித குற்றமும் இன்றி உதவித் தொகை வழங்கியிருக்கிறார்கள். இருந்தாலும் அரசாங்கப் பணம் வந்து சேருவதற்குக் காலதாமதமானால் அதற்கு ஏற்றபடி பணம் கொடுப்பதிலும் காலதாமதம் ஆகிவிடுகிறது. ஆகவே இந்த ஆண்டிலே எவ்வளவு செலவிட்டிருக்கிறோமோ அந்தத் தொகையை ஆரம்பத்திலேயே வரவுசெலவுத் திட்டத்தில் ஒதுக்கிவிட வேண்டும். அப்படிச் செய்தால்தான் மாணவர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் இராது என்று தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

20th January 1961] [Sri K. R. Viswanathan]

அதற்கு அடுத்தபடியாக கல்வியைப்பற்றி அரசாங்கம் செய்து வருகின்ற கடமைகள் பல. அவற்றை நாம் பாராட்டத்தான் வேண்டும். நாட்டில் இன்று இருக்கிற நிலைமையையும் நான் எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறேன். இன்றைக்கு எங்கே பார்த்தாலும் தமிழைப்பற்றி பிரமாதமாகப் பேசுகின்றோம். தமிழ் படிக்கின்றவர்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும் இரண்டு மூன்று தமிழ் வித்வான்கள் தோன்றியிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் இன்றைய தினம் தமிழ் வித்வான் படித்துவிட்டு என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கிறார்கள். உயர்நிலைப் பள்ளிகளைத் தவிர வேறு இடங்களில் அவர்களை நியமிக்க வசதி இல்லை. அதே போல் 'ட்ரில் மாஸ்டர்கள்' என்று சொல்லப்படுகிறவர்களும் நிறைய பயிற்சிபெற்று இருக்கிறார்கள். இவர்களுக்கும் வேலை வாய்ப்பு குறைவாக இருக்கிறது. அதனால் தமிழ் வித்வான்களோடு இவர்களும் வேலை இல்லாமல் தவிக்கிறார்கள். உயர்நிலைத் துவக்கப் பள்ளிகளிலும் கூட இவர்களை நியமிக்க வசதி செய்தால் இவர்கள் எல்லோருக்கும் வேலை கிடைக்க வாய்ப்பு உண்டு. அத்தகைய முடிவு எடுத்தால் மிகவும் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் பெருமான் உரை பலவகையிலும் பாராட்டத்தக்கதாக இருக்கிறது. அத்தகைய பெருமைவாய்ந்த உரையை நிகழ்த்திய அப்பெருமானுக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து, அதுபற்றி பேசவும், சிந்திக்கவும் வாய்ப்புக் கொடுத்தமைக்காக நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow.

The House then adjourned.

## VII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUES.

### A. Statutory Rules and Orders.

* 1. *Amendments to the Tiruchirappalli Kaieruvaram and Mattuvaram Rules*, 1959, *issued in G.O. Ms. No.* 2847, *Revenue*, *dated* 13*th July* 1960. [*Laid on the table of the House under Section* 13 (2) *of the Tiruchirappalli Kaieruvaram and Mattuvaram Act*, 1958 (*Madras Act XXXVI of* 1958).]

* 2. *Notification issued with G.O. Ms. No.* 3423, *Industries, Labour and Co-operation, dated* 13*th July* 1960, *under the Madras Money-lenders Act*, 1957. [*Laid on the table of the House under Section* 22 *of the Madras Money-lenders Act*, 1957 (*Madras Act XXVI of*1957).]

* 3. *Notification issued with G.O. No.* 1273, *Local Administration, dated* 27*th July* 1960, *declaring each of the local areas forming a Development Block in East Ramanathapuram Development*